# திருமால் திருமாலை

ஆசிரியர்
அருட்கவி, நற்றமிழ்ச்செல்வர்
டாக்டர், சி. தாமோதரன், டி. லிட்.,



வெளியீடு
**வெற்றிவேல் பதிப்பகம்**
எண். 5, முதல் பங்களா தெரு,
ஈக்காட்டுத் தாங்கல், சென்னை-97.
போன் : 2345516

Rs 12-00

# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | திருமால் திருமாலை |
| நூற் பொருள் | : | பக்திப் பாடல்கள் |
| பதிப்பாண்டு | ; | 1997 செப்டம்பர் |
| பதிப்பு விவரம் | : | முதற்பதிப்பு |
| மொழி | ; | தமிழ் |
| பதிப்புரிமை | ; | ஆசிரியருக்கு |
| வெளியீடு | : | வெற்றிவேல் பதிப்பகம் |
| நூலின் அளவு | ; | 1/8 டெம்மிசைஸ் |
| பக்கங்கள் | ; | 88 |
| தாள் | : | 10, 7. கி.கி. வெள்ளைத்தாள் |
| அட்டைக்கட்டு தன்மை | ; | ஸ்ட்ரா போர்ட் |
| மேலட்டை | : | ஆர்ட் வித் லேம்பினேஷன் |
| பைண்டிங் | : | செக்ஷன் தையல் (நூல்கட்டு) |
| முகப்பு ஓவியம் | ; | மோகன்தாஸ் |
| அச்சிட்டோர் | ; | வேற்றிவேல் அச்சுக்கூடம் சென்னை-97, |
| மேலட்டை அச்சிட்டோர் | ! | ஓம் வினாயகா பிரிண்டர்ஸ் சென்னை-24. |
| நிதியுதவி | ; | திருமலை-திருப்பதி தேவஸ்தான அறக்கட்டளை |
| வெளியீடு | : | வெற்றிவேல் பதிப்பகம் எண். 5, முதல்பங்களா தெரு ஈக்காட்டுத் தாங்கல் சென்னை-97. போன் ; 2345516 |

# மதிப்புரை

'சித்தகலாரத்னம் கவிதைத் தென்றல்'

'பக்திநூற்பாவலர்'

கவிஞான வாரிதி 'முருகனடிமை'

புலவர் விசூர் மாணிக்கம், எம். ஏ. எம். எட்,

(மறைமலைநகர் கம்பன்கழக அமைப்பாளர்)

'ஆன்மிக இலக்கிய பட்டிமன்ற பேச்சாளர்'

மறைமலைநகர்-603209,

---

ஆனாத செல்வத்து அரம்பையர்கள்
தற்சூழ
வானாளும் செல்வமும் மண்ணரசும்
யான் வேண்டேன்
தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச்
சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையேன்
ஆவேனே!''

என்றும் செண்பகமாய் நிற்கும் திருவுடையேன் ஆவேனே என்றும், கானாறாய்ப் பாயும் கருத்துடையேன் ஆவேனே என்றும்-படியாய்க் கிடந்துன்பவளவாய் காண்பேனே என்றும்-எம்பெருமான் பொன் மாமலைமேல் ஏதேனும் ஆவேனே என்றும் ஆழ்வார்கள் பாடியருளிய-திருவேங்கடத்தான் மீது சென்னையில் உள்ள ஈக்காட்டுத்தாங்கல் (ஈகை) எனும் பூக்காட்டுத்தாங்கலில்-கவிதைப் பூக்காட்டுத் தாங்கலில்-தோன்றிய அருட்கவி சி. தாமோதரனார் இவர்கள் தற்போது ''திருமால் திருமாலை'' எனும் அற்புதப் பதிகம் பாடியருளியுள்ளார்கள், ''தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரனை'' என்று ஆண்டாள் அருளிச் செய்த அருள் வாக்குக் கேற்ப நம் ஆன்மீக வள்ளல் அருட்கவி சி, தாமோதரனார் அவர்கள் தோன்றி ஆன்மிக உலகுக்கு அவ்வப்போது பற்பல நூல்களை எழுதி அளித்துள்ளார்கள்,

அந்தத் தாமோதரனை இந்தத் தாமோதரன் பாடி பரவுவது எவ்வளவு பொருத்தம் பாருங்கள். மேலும் இந்நூல் திருமலை திருப்பதி தேவஸ்தான நிதியுதவியுடன் வெளிவருவதே இந்நூலின் சிறப்பையும்-ஆசிரியர்தம் அருட் பண்பையும் எடுத்துக் காட்டும், மற்றும்-

திருவேங்கடத்தானின் அருளாரமுதத்தை அள்ளி ஊட்டும், மேலும்-இந்நூல் திருத்துழாய் மாலைபோல் மணக்கும் என்பதில் ஐயமில்லை. இப்பாமாலையைப் படிப்போர்தம் வாய் மணக்கும், கேட்போர்தம் செவி மணக்கும்,

ஈது! உண்மை, இதோ இப்பாமாலையின் முதற்பாடல் ''பார்த்தனுக்குச் சாரதியே கோவிந்த குருவே'' எனத் தொடங்கும் நேர்த்தியே நேர்த்தி! இப்பாடலில் முழுவதும் தெரிவதோ அம்மூர்த்தியின் கீர்த்தி மேலும்,

'மனமது செம்மையானால் மந்திரம் செபிக்க வேண்டாம்' என்பது ஆன்றோர் வாக்கு, அதற்கு இணங்க இச்சான்றோர், 'சித்தம் தெளிவதற்கு கோவிந்தகுருவே- சிவராமன் என்றறிந் தேன் கோவிந்தகுருவே' என்று பாடி ஆடுகிறார்,

கண்ணனை எண்ணிக் கைத்தாளம் போடுகிறார். மேலும் அண்டசராசரம் அனைத்திலும் அவனருள் நிறைந்திருப்பதை எண்ணி எண்ணி வியக்கிறார், 'மண்காற்று நீர் நெருப்பே கோவிந்தகுருவே- மரஞ்செடி கொடியான கோவிந்தகுருவே என்று பாடலை முடிக்கிறார், மீண்டும் எழுதத்துடிக்கிறார்,

இப்பாடலைப் பாடும்போது 'பார்க்கும் மரங்கள் எல்லாம் நந்தலாலா-நின்றன் பச்சை நிறந்தோன்றுதையே நந்தலாலா' என்ற மகாகவி பாரதியின் பாடல் நினைவில் வருகிறது, கோவிந்தகுருவே எனும் பாடல் நீங்கா இன்பம் தருகிறது, அடுத்து சூரியநாரணன் எனும் பாடலில் ''சூரியநாரணன் சுந்தரவாமனன் காரியகாரணன் கார்முகில்மேனியன்'' என்று எம்பெருமானின் நிறங்களைக் காட்டுகின்றார். இப்பாடலைப் படிக்கும்போது 'பச்சைமாமலை போல் மேனி என்ற ஆழ் வாரின் வரிகளும்' மையோ மரகதமோ-மறிகடலோ-மழை முகிலோ-எனும் கம்பனின் வரிகளும் நெஞ்சில் தெரிகிறது. நம் அருட்கவி தாமோதரனாரின் பாடல் வரிகளும் புரிகிறது,

இப்பாடலில் எம்பெருமானின் அருட்செயல்களையும் அற்புதமாக-அடுக்கடுக்காக-அடுக்கிக் காட்டுகிறார், காளிங்க நர்த்தன கடவுள் போற்றி! வாலியை வதைத்த வடிவே போற்றி! குன்றைக் குடையாய்ப் பிடித்தாய் போற்றி! ஒன்றாய் பலவாய் உடையாய் போற்றி! ஏழுமலைமேல் இருந்தாய் போற்றி! வாழும் உயிர்களின் வாழ்வே போற்றி! என்று பாடிப் பாடிப்பரவசப்ம்படுகிறார், மேலும்-

நம்மையும் திருமலைக்கே அழைத்துச் சென்று பரவசப் பட வைக்கிறார், இஃதன்றோ ஆசிரியரின் மாண்பு. இறைவனைப்பாடுவதே இவரின் நோன்பு.

அடுத்து திருவரங்கா துயிலெழுக என்றபாடல் பொன்னி சூழ் திருவரங்கனின் புகழைப் புலப்படுத்துகிறது, புலப்படுத்துவதோடு அன்றி ஆன்மிக அருளாளர்களைப் பலப்படுத்துகிறது,

'சற்குருவே ஸ்ரீரங்கா சரணம் நீ எழுக! சாற்றினேன் தமிழ் மாலை சரணம் நீ எழுக! என்று ஒவ்வொரு அடியாகப் பாடும்போது நமக்கு அவன் மலை மீது உள்ள படிகளில் ஏறுவது போன்ற ஒரு உணர்வு, அரங்கத்தம்மானின் ஆலயத்தை வலம் வருவது போலவும் ஒரு உணர்வு, எல்லாவற்றுக்கும் மேலாக பணிவாக-அரங்கனின் பதம் பணிந்து' ஒயிலாகத் துயிலெழுக-என்று மென்மையாகவும் பாடுகின்றார், போற்றினேன் பொற்பாதம் பொன்னே நீ எழுக-பொழுதெல்லாம் உறக்கமோ பூவே நீ எழுக-என்று பூப்போன்ற தமிழால் பூப்போன்ற நாயகனைத் துயில் எழுப்புகின்றார். மேலும் அரங்கத்தம்மானே! நீ எதற்காக எழ வேண்டும் தெரியுமா! அகங்காரக் கிழங்கினை அகற்றவே எழுக! அறியாமை அதர்மம் அகன்றிட நீ எழுக! என்று ஆத்மசாதகன் உய்யும் வழியை-இப்பாடலில் உணர்த்துகின்றார், இப்பாடலின் வரிகள் அகந்தைக் கிழங்கை அகழ்ந்து எடுக்கும் தொழும்பர் உன் கோயிற்கு ஏற்றும் விளக்கே' என்று பாடிய குமரகுருபரரின்

மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்ப் பாடலை-நினைவூட்டி மகிழ்வைத் தருகிறது, மேலும்-

இந்நூலாசிரியரின் புலமையும் பெருகி வருகிறது அடுத்து-

திருப்பதிக்கு வந்திருந்தேன் நாராயணா-நான்
திருமொட்டை அடிச்சிகிட்டேன் நாராயணா:
உருப்படியாக வேணும் நாராயணா-நீ
உறுதுணை யாகவேணும் நாராயணா!

என்று பாடும் போது நம்மை மெய்மறக்கச் செய்து ஆட வைக்கிறார் ஆசிரியர். ஆட வைப்பதுடன் ஐயன் அருள் நாட வைக்கிறார், மேலும்-

'லஜ்ஜை விட்டுக் கஜ்ஜை கட்டு' என்ற பழமொழிப் படி-பாடி பஜனை செய்ய-பாடியாட மிகச் சிறந்த சந்தப் பாடல் இது, ஆடிப்பாடும் அருளாளர்களுக்குச் சொந்தப்பாடல், அடியார்கட் கென்றே ஆசிரியர் தம் நாவில்-பாவில்-வந்த பாடல்,

இதனைப்பாடினால் நம் எதிரில் தெரியும் அவன் கோவில் தொடர்ந்து பாடி ஆடினால் விழமாட்டடோம் நோவில்,

நாம் தாயின் கருப்படியாமல்-உருப்படியாக-உகந்த பாடல், துழாய் போன்று-சுகந்த பாடல்,

அடுத்து-அதே பாடலில்-நோயற்ற வாழ்வருள்வாய் நாராயணா மனம் நொந்திடாத நிலையருள்வாய் நாராயணா! தாயாக உடனிருப்பாய் நாராயணா-எங்கும் தாங்கிட வேண்டுமையா நாராயணா' என்றுபாடி முடிக்கிறார், இப்பாடலின் வரிகளில் நோயற்ற வாழ்வில் நான் வாழவேண்டும்' என்ற வள்ளற் பெருமான் இராமலிங்கர் வருகிறார்.

தாயன்பைத் தருகிறார்,

அடுத்து-நம் ஆசிரியர்க்கு வைகுந்தம் தெரிகிறதாம் 'திருமால் அளந்த பூமியைக் கண்டேன் திருவடி தெரிகிறது-அவன்-திருவடி உயர்ந்த வானத்தைக் கண்டேன் திருவருள் புரிகிறது!-என்று பாடுகின்றார், அருட்கவி ஆயிற்றே! வைகுந்தம் தெரியாமலா இருக்கும், புள்ளினம் கூவும் ஓசையைக் கேட்டேன்-புல்லாங் குழலல்லவா-இங்கு-மெல்லென வீசும் தென்றலைக் கேட்டேன் மெய்ப்பொருள் அவனல்லவா?' எனும் போது நம் ஆசிரியர் தாமோதரனார்-மெய்ப்பொருள் காண்ப தறிவு என்ற தெள்ளு தமிழ் வள்ளுவன் காட்டும் மெய்ஞ்ஞானி

யாகவே தெரிகிறார், மெய்ஞ்ஞானிக்கு வைகுந்தம்-கைலாசம் தெரியத்தான் செய்யும், இல்லையேல் அவன் பொய்ஞானியாக வல்லவா போவான்.

எனவே வைகுந்தம் தெரிகிறது என்ற பாடலில் ஆத்ம சாதகனின் முன்னேற்றம் நன்கு புரிகிறது.

அடுத்து-எல்லாம் சின்ன கண்ணன் என்ற பாடலில் கண்ணன் என் சேவகன் கண்ணன் என் தோழன் கண்ணன் என்தாய் கண்ணன் என் தந்தை கண்ணன் என் அரசன் கண்ணன் என் சீடன் கண்ணன் என் சற்குரு என்று எல்லா வற்றையும் கண்ணனாகக் காணும் பாரதியின் வரிகள்தான் கண்ணில் தெரிகிறது. 'தொட்டியை ஆட்டிவிட்டுக் குழந்தையைக் கிள்ளி விடுதல்' என்ற பழமொழியையும் பாடலில் இடம் பெறச் செய்து நம் மனதிலும் இடம் பிடித்து விடுகிறார் தாமோதரனார்.

அடுத்து காரணன் பூரணன் யார்? எனும் கேள்விக்குத் தக்க விடையளித்து நம் நெஞ்சத்தை-நாரணன் வாழ் மஞ்சத்தை-அற்புதமாகக் காட்டுகின்றார், மேலும்

'நம்பினோர் கெடுவதில்லை' என்பதற்கேற்ப வருவான் அருள்வான் என அடியார் உள்ளத்தில் நம்பிக்கை விதையை ஊன்றுகிறார்,

நம்கண்முன்னே ஆசிரியர் தாமோதரனார் அருட் குருவாகவே தோன்றுகிறார். மேலும்-

'வருவான் அருள்வான் காத்திருங்கள்!-திரு
வேங்கடம் சென்று வழிபடுங்கள்-
தருவான் நன்மைகள் உணர்ந்திடுங்கள்-அவன்
தாளினைப் பணிந்து வளம் பெறுங்கள்'

என நக்கீரரைப் போல நம்மையும் ஆற்றுப்படுத்துகின்றார், அடுத்து பத்தாவதாரனின் பதமலர் பணிந்து திருத்துழாய் அணிந்து திருமலைப் பத்து இந்தா இதுவே உன் அழியாச் சொத்து! எனத் திருமங்கையாழ்வார் தம் திருமொழிப்பாடலே போல் மானுடம் உய்ய ஒருபத்தை அளிக்கின்றார், அவன் அருள் எண்ணிக் களிக்கின்றார்.

அப்பத்தில்-ஆன்மிக முத்தில் ஒரு சில காண்போம் எம்பெருமான் இராமாவதாரத்தில் வனவாசம் போனது நரசிம்ம அவதாரத்தில் தூணின்று வெளிப்பட்டது வாமனனானது

கிருஷ்ணாவதாரத்தில் ஐவர்க்குத் துணையானது தூதனானது அனைத்தையும் அன்புடன் எடுத்துக் கூறி 'தேசங்கள் தோறும் நீ திருவலம் வந்துமே திருப்தியை விதைக்க வேண்டும்; திருமலைப் பதிவாழும் திருமாலே! பெருமானே! தெய்வமே அருள் செய்வாயே! என்று முடிக்கும் பாங்கு படிக்கும் நெஞ்சங்களைப் பரவசப்படுத்தும் மரவுரி தரித்த மாதவனை மாசற்ற அடியாரின் வசப்படுத்தும்,

அடுத்துக் கருணைக்கடலாய கூடாரை வெல்லும் சீர் கோவிந்தனை-மாயனை - மணிவண்ணனை - ஹரிகோவிந்தம்! ஹரி கோவிந்தம்! அறிவே குருவே ஹரிகோவிந்தம்! என்று நம்மைப்பாடியாடித் தாளம் போட வைக்கிறார் அருட்கவி மற்றும்.

அந்த இனிய ஹரி கோவிந்தம் என்னென்ன செய்யும் என்பதைப் பட்டியலிட்டுக் காட்டும் பாங்கே ஒரு தனி! அவையாவும் தனித்தனி முக்கனி!

'வறுமை ஒழிப்பான் ஹரி கோவிந்தம்
வசந்த மளிப்பான் ஹரி கோவிந்தம்
திருவும் கல்வியும் ஹரி கோவிந்தம்
திருப்பதி வாழ்வான் ஹரி கோவிந்தம்!

என்று நாம் பாடிப்பாடி மகிழவேண்டி அருமையான பாடலை ஆக்கித் தந்துள்ளார் நம் அருட்கவி. இப்பாடலை என்னும் போது 'முடியாப் பிறவிக்கடலில் புகார் முழுதும் கெடுக்கும் மிடியால் படியில் விதனப்படார் என வெற்றிவேல் தாங்கும் பெருமானின் நாமமாகிய 'முருகா' என மொழிவார்க்கு அருண கிரியார் பாடிய பாடல்தான் நினைவில் எழுகிறது. இதனால் நம் அருட்கவியின் ஆற்றலை எண்ணி எண்ணி நம் நெஞ்சம் அவர்தம் அடிமலர் தொழுகிறது, முடிவில் அரியும் சிவனும் ஒன்றேயாகும். அகரமும் இகரமும் அவனேயாகும் எனப்பாடி சைவ வைஷ்ணவ ஒருமைக்குச் சிகரமும் ஆகிறார் நம் அருட்கவி. அடுத்து சரணாகதி தத்துவத்தைத் திருவடி சரணத்தில் விளக்குகின்றார், குருவாயூரில் குழந்தை வடிவில் திருமால் சிரிக்கின்றான் அவன் திருப்பதி மலைமேல் கோவிந்தனாக திருவருள் புரிகின்றான் எனப்பாடுகின்றார்.

அடுத்து திசையெல்லாம் போற்றும் பெருமானை இசைப் பாடலிலும் வடித்துக் காட்டுகின்றார், அப்பாடலில் சூடிக்

கொடுத்த சுடர்க் கொடியாம் ஆண்டாளையும் புகழ்ந்துபாடி நம்மையும் ஆண்டான் எனப் போற்றும் சிறப்பைப் பெற்று விடுகிறார் நம் அருட்கவி,

இப்படியே ஓங்கி உலகளந்த உத்தமனை - ஆழிமழைக் கண்ணனை-மணிவண்ணனை ஆயர்குல அணிவிளக்கை தூய பெருநீர் யமுனைத் துறைவனை-மாவாய் பிளந்தானை-தேவாதி தேவனை—வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனை—செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலை—ஏழுமாலைமேல் இருப்பவனை—நாற்பத்தொன்று தலைப்புகளில் பாடிப்பாடி—பரவசமுற்றும்—அவனருட் தாகம் தணியாமல்—இறுதியில் கதைப்பாடலாக—தூணில் தோன்றியவன் என்றும்-வரம் பெற்ற பத்மாசூரன் என்றும்—எம்பெருமானின் ஈடில் புகழை பாடிப் பரவுகின்றார் நம் அருட்கவி. அப்படியும் தணியாமல் அவருடைய பக்திப் பெருக்கு இறுதியில் ஆழ்வார்தம் பாடலைப்பாடி மகிழ்கிறது, ஆழ்வாாகள் அமுதத்தை அள்ளி அள்ளிப் பருகுகின்றார் மேலும்.

இந்நூலினை இன்னும் திறனாய்வு செய்யப்புகின் அதுவே ஒரு தனிநூலாகி—நெடியவன் போல் நீளும் என அஞ்சி இத்துடன் முடிக்க எண்ணினேன். இயன்றவரை பண்ணினேன்

மொத்தத்தில் இந்நூல் படிப்போர்தம் சித்தத்தில் நிலைத்து நிற்கும், பித்தம் தெளிவிக்கும் பிறவிபறுக்கும் பெருமானின் திருப்பதத்தில் சேர்ப்பிக்கும். மேலும்.

இன்றைய நாளில் இருட்கவி பல தோன்றி மக்களை மயக்கும் நிலையில்—நம் தாமோதரனார் போன்ற அருட்கவி தொடுக்கும்—அருட்கவிகள் பல்கிப் பெருக வேண்டும், இன்றைய நாளில் நம் அருட்கவி சி. தாமோதரனார்க்கு நிகர் தாமோதரனாரே என்பதில் ஐயமில்லை. வாழ்க நம் அருட்கவி வளர்க அவர்தம் 'திருமால் திருமாலை' பக்தர்கட்குக் கிடைத்த தனிப்பெருமாலை ஒப்பற்ற உயர்மாலை. இதன் மூலம் பிடிப்போம் அவன் காலை வாங்கிப்படிப்போம் இவ்வருள் நூலை. ராமஜெயம் ஸ்ரீராமஜெயம் நம்பினபேருக்கு ஏதுபயம் எல்லாம் அவன் மயம்,

திருவேங்கடவன் திருவடிகளே சரணம்!

# என்னுரை

பெரியீர்! நல்வணக்கம்!

இளம் பிராயத்தில் எங்களூரில் பெரியாழ்வார் சபை என்ற பஜனை சபை இருந்தது. பழைய கால கிருஷ்ணன் படம் மட்டுமே வழிபாட்டுக்குரியது. அக்காலத்தில் அவ்வூர் முதி யோர்கள் பெருமாளை வணங்குவதில் சிரத்தை எடுத்துக் கொண்டிருந்தார்கள்!

மார்கழி மாதம் தவிர மற்ற மாதங்களில் ஞாயிற்றுக் கிழமை காலை வேளையில் பஜனை ஊர்வலம் வரும். விடியற் காலையில் நான் குளித்து பஜனைக்குச் செல்லவேண்டும். இது என் பெற்றோரின் கனிந்த உத்தரவு; மார்கழி மாதத்தில் மட்டும் தினமும் காலையில் பஜனை ஊர்வலம்.

அண்மையிலிருக்கும் சைதாப்பேட்டையிலிருந்து பஜனை வாத்தியார் வருவார். அவருடன் மிருதங்கம் வாசிப்பதற்கு வித்வான் ஒருவரும் வருவார். பஜனை ஊர் சுற்றி வரும் போது ஒவ்வொருவர் வீட்டிலும் எண்ணை—பணம் போன்ற வற்றை உடன் வரும் கருடஸ்தம்ப விளக்கில் இடுவார்கள்,

அந்தக் கருடஸ்தம்பத்தை எனது தந்தையார் கைங்கர்ய மாக வாங்கிக் கொடுத்திருந்தார். பஜனை வாத்தியார் ரொம்ப வும் சங்கீத ஞானம் உள்ளவர் பலபல ராகங்களில் இனிமை யாகப் பாடுவார். அதனால் அவரை என் வீட்டுக்கு அழைத்து வந்து உணவளித்து உபகாரம் செய்வேன். என்மீது அவருக் கும் நிறையபற்று.

காரணம், ஓரளவு எனக்கும் குரல் வளம் இனிமையாக இருக்கும். பாடல் உச்சரிப்பு சுத்தமாக இருக்கும். அந்நாளில் ஈக்காட்டுத்தாங்கலில் முப்பத்திரண்டு வீடுகள் மட்டுமே இருந்து வந்தது. பக்தி பூர்வமாகவும், நெறிமுறையாகவும் வாழ்ந்து வந்தார்கள்!

ஆனால், தற்காலத்தில் அதே ஈக்காட்டுத் தாங்கலைச் சுற்றிலும், ஆயிரக்கணக்கான வீடுகள், மாடி வீடுகள் வந்திருந்தும் அங்கெல்லாம் பஜனை ஊர்வலம் கிடையாது. பழைய அதே கிராமத்தில் மார்கழி மாதத்தில் மட்டும் கூட்டமில்லாத ஒரு பஜனை ஊர்வலம் தோடர்ந்து நடந்து வருகிறது.

இன்றும் அதே கருடஸ்தம்பமும் ஊர்வலம் வருகிறது. காணும் போது எனக்கு என் தந்தையாரின் நினைப்பும், கடந்த கால என் வாழ்க்கை முறை நடப்பும் நினைவுக்கு வந்கிறது. இன்று வரை அதே கூடாரவல்லி விசேஷம் நடப்பது கண்டு ஆனந்தமடைகிறேன்.

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் நடந்த ஒரு சம்பவத்தை நான் உங்களுக்குச் சொல்லவேண்டியதிருக்கிறது. நானும் இன்னும் நான்கு பேர்களுமாகச் சேர்ந்து நில வியாபாரம் ஒன்று செய்ய நேர்ந்தது. அது நல்ல படியாக நடந்தால் திருப்பதி வருவதாகப் பிரார்த்திக் கொண்டோம். அதுவும் நடைபாதை வழியாக மலையேறி வருவதாகவும் சொல்லிக் கொண்டோம்!

வியாபாரம் நல்லபடியாக முடிந்தது. நிறைய சில்லரையும் கிடைத்தது. அதனால், பி.டி. அம்பாசிட்டர் கார் ஒன்று எடுத்துக் கொண்டு புறப்பட்டு விட்டோம். திருப்பதிக்கு, பிரார்த்தனையை மறந்து விட்டோம். எல்லாம் பணமயக்கம்' அதனால் மனமயக்கம்.

கார்மூலமாகவே மலையேறி, பெருமாளையும் தரிசனம் கண்டு விட்டோம். ஊர்திரும்ப கார் இருக்கும் இடத்திற்கு வந்தோம்! என்ன ஆச்சரியம்! கார் ரிப்பேர். ரிப்போராவதற்கு அரை நாள் ஆகுமென்று டிரைவர் சொல்லிவிட்டான். அப்பொழுதுதான் எனக்கு அந்த பிரார்த்தனை ஞாபகம் வந்தது. மற்றவர்களிடமும் ஞாபகப்படுத்தினேன்.

எல்லோருமாக முடிவெடுத்து நடைபாதை வழியாக நடந்து செல்ல ஆரம்பித்தோம், நாங்கள் படியிறங்கி கீழ் திருப்பதி மண்ணில் கால் வைக்கவும், சொன்னபடி காரும் அங்கு வந்து நின்றது!

சொன்ன சொல் காப்பவன் பெருமாள். அடியார்களும் அப்படியிருக்க வேண்டுமென்று எண்ணுகிறான் போலும், நான் மட்டும் ஆண்டுக்கு ஒரு முறையாவது சென்று தரிசனம் கண்டு வருகிறேன். என் கண்களுக்கு பெருமாள் வராக அவதாரத்தில் தான் காட்சியளிக்கிறார்.

நான் கண்களை நிமிட்டி எத்தனை முறைப்பார்த்தாலும் அதே வராக அவதாரக் காட்சிதான் தெரிகிறது. என்னே திருவருள்! ஏனிந்த தோற்றமாற்றம்? யாரறிவார் அந்த மாயாவி யின் திருவருளை. என் பாமாலையான திருமால் திருமாலையை வராகனுக்கு சூட்டி மகிழ்கிறேன். அந்த சிவனின் திருப்பாதங் களைக் காண அவன் முயற்சித்ததுபோல், என்னையும் முயற்சிக்க சொல்லுகிறானோ என்னவோ!

அவன் கொடுத்துக் கெட்டவன். இவன் கொடுத்துக் காப்பவன். இரண்டு செயல்களுக்கும் இவன் ஒருவனே என்ற நம்பிக்கை எனக்குப் பூரணமாக உண்டு. எனக்கு ஐந்து தொழில்கள் தெரியும். கவிதை எழுதுவேன் கவிஞர் என்ற பெயர். கதை எழுதுவேன் கதாசிரியர் என்ற பெயர் பஞ்சாயத்துப் பேசுவேன்-அப்போது நான் தலைவர். வியாபாரத்தில் நான் முதலாளி, ஆகமொத்தம் எல்லா தொழில் களும் நான் ஒருவனே செய்கிறேன்.

அதுபோல்தான் இறைவனும் அந்தந்த தொழிலின்போது அழைக்கும் பெயர் தான் மாறுகிறது. இறைவன் ஒருவனே! காக்கும் கடவுளின் கழல் பணிவோம். எல்லாம் செயல்கூடும் நன்றி! வணக்கம்!







## விநாயகர் காப்பு

திருமாலைப் பாடவும் திருவருள் பெருகிவரும்
வறுமையும் துன்பமும் வாராது - உறுதுணையாங்
வரசித்தி வினாயகன் வருவான் மாலோடு
தரிசனம் தருவான் தினம்!

## திருமகள் காப்பு

கரியமால் நெடுமால் கழலிணைப் பணிந்திட
திருமால் திருமாலை திருவருளாம்-திருமகள்
அருளாலே பொருளும் அருளும் நிலையாகும்
ஒருபோதும் குறைவில்லை உணர்!

## கலைமகள் காப்பு

கலைமகள் இன்றும் கற்கின்றாள் கற்றதை
நிலையாக உலகிற்கு அருள்கின்றாள்-பலமுறை
திருமால் திருமாலை தினம்பாடும் அன்பர்க்கு
பெருவாழ்வு அளிப்பாள் பரிந்து!

# திருமால் திருமாலை
# கோவிந்த குருவே!

பார்த்தனுக்கு சாரதியே கோவிந்த குருவே
பாரதப் போர்முடித்த கோவிந்த குருவே
தீர்த்தத் திருத்துழாயில் கோவிந்த குருவே
தீஞ்சுவைக் கண்டேனடா கோவிந்த குருவே!

பத்துப் பிறவியிலும் கோவிந்த குருவே
பரந்தாமன் என்றறிந்தேன் கோவிந்த குருவே
சித்தம் தெளிவதற்கு கோவிந்த குருவே
சிவராமன் என்றறிந்தேன் கோவிந்த குருவே!

தீப ஒளி ஏற்றி வைத்த கோவிந்த குருவே
தீமைகளைச் சாடி வைத்த கோவிந்த குருவே
கோபமில்லை என்றனுக்கு கோவிந்த குருவே
கோபியராய் கைதொழுதேன் கோவிந்த குருவே!

தர்மம் தழைக்கவைத்த கோவிந்த குருவே
தானம் நிலைக்க வைத்த கோவிந்த குருவே
கீதையில் சொல்லி வைத்த கோவிந்த குருவே!
கர்மம் உணரவைத்த கோவிந்த குருவே

பாற்கடல் வாழ்பவனே கோவித்த குருவே!
பரம்பொருள் ஆனவனே கோவிந்த குருவே
தேரோட்டி வென்றவனே கோவிந்த குருவே
திருமாலே நெடுமாலே கோவிந்த குருவே!

சங்கொடு நிற்பவனே கோவிந்தே குருவே
சக்கரம் கொண்டவனே கோவிந்த குருவே
வேங்கடத் திருமலைவாழ் கோவிந்த குருவே
வேதங்கள் நின்னருளே கோவிந்த குருவே!

மூன்றடி மண்கேட்ட கோவிந்த குருவே
முத்தர்க் கருளுகின்ற கோவிந்த குருவே
என்றும் நினதருளே கோவிந்த குருவே
எங்கனும் நின்வடிவே கோவிந்த குருவே!

சத்திய சோதனையில் கோவிந்த குருவே
சான்றாக நின்றவனே கோவிந்த குருவே
உத்தமனே ராகவனே கோவிந்த குருவே
உலகாளும் மாதவனே கோவிந்த குருவே!

அண்டபிண்டம் ஆளுகின்ற கோவிந்த குருவே
அத்தனையும் நின்னருளே கோவிந்த குருவே
கண்டுவிட்டேன் நின்பெருமை கோவிந்த குருவே
கண்ணனே வரவேண்டும் கோவிந்த குருவே!

கடல்நீரில் உப்பானாய் கோவிந்த குருவே
கடலுக்குள் முத்தானாய் கோவிந்த குருவே
வடக்கு மலையானே கோவிந்த குருவே,
வரந்தர வரவேண்டும் கோவிந்த குகுவே!

விண்ணவர்கள் போற்றுகின்ற கோவிந்த குருவே
வேங்கடத்தில் குருவான கோவிந்த குருவே
மண் காற்று நீர் நெருப்பே கோவித்த குருவே
மரஞ்செடி கொடியான கோவிந்த குருவே!

வேங்கடத் திருமலையில் கோவிந்த குருவே
வேண்டும் வரம் தருபவனே கோவிந்த குருவே
தாங்கும் திருவருளே கோவிந்த குருவே
தயவன்பு உள்ளவனே கோவிந்த குருவே!

நல்லவை நீ விதைப்பாய் கோவிந்த குருவே
நன்மைகள் நீ விதிப்பாய் கோவிந்த குருவே
அல்லல்கள் நீயறுப்பாய் கோவிந்த குருவே
ஆனந்த வாழ்வளிப்பாய் கோவிந்த குருவே!

இல்லாமை நீ யொழிப்பாய் கோவிந்த குருவே
இரக்கத்தை நீ வளர்ப்பாய் கோவிந்த குருவே
பொல்லாமை போயொழிப்பாய் கோவிந்த குருவே
புண்ணியம் நீ வளர்ப்பாய் கோவிந்த குருவே!

என்னில் நீயிருப்பாய் கோவிந்த குருவே
ஏகாந்தம் நீயளிப்பாய் கோவிந்த குருவே
தன்னை அறிவதற்கு கோவிந்த குருவே
தாயாக நீ வருவாய் கோவிந்த குருவே!

உலகெங்கும் சாந்தியருள் கோவிந்த குருவே
உண்மைக்கு நன்மையருள் கோவிந்த குருவே
வலம்புரி சங்கொலித்து கோவிந்த குருவே
வருங்காலம் நன்மையருள் கோவிந்தே குருவே!

கண்டசுகம் ஏதுமில்லை கோவிந்தே குருவே
காதலில் ஏங்குகிறேன் கோவிந்த குருவே
கண்ணனாய் வரவேண்டும் கோவிந்த குருவே
காலமெல்லாம் காத்திருப்பேன் கோவிந்த குருவே!

# சூரிய நாரணன்!

சூரிய நாரணன்; சுந்தரவாமனன்
காரிய காரணன்; கார்முகில் மேனியன்!

வில்லுடைக் கையன்; வேதத்தின் தலைவன்
செல்வத் திருமகள் செல்வ நாயகன்!

சங்கு சக்கரன்; சண்முகப் பிரியன்
சிங்க முகத்தான் செகத்த ரட்சகன்!

பாற்கடல் வண்ணன்; பாண்டவர் கண்ணன்
தேரினை ஓட்டிய திருமால் மன்னன்!

நீர்நிற மானவன்; நித்தியன் என்னும்
கூர்மவ தாரன்; குருவா யூரன்!

இல்லறம் துறவறம் இனிமை சேர்ந்தவன்;
நல்லறம் சொன்ன நந்த குமாரன்!

ஹரி ஹரி என்னும் அன்பின் நாயகன்;
அறிவே குருவாய் அமைந்த தாயவன்!

பொன்னும் பொருளும் அளிக்கும் புகழவன்;
எண்ணும் எழுத்தும் அளிக்கும் கலையவன்!

வணங்கும் அடியவர் வாழ்த்துக் குரியவன்;
மணக்கும் திருத்துழாய் மார்பில் கொண்டவன்!

பத்தவ தாரன் பாஞ்சாலி சோதரன்;
முத்தி யளிக்கும் மோகன ரங்கன்!

தாயின் மேலாம் தயவே போற்றி
ஆயர் குலத்தின் ஆதவ போற்றி!

மாயவ போற்றி மாதவ போற்றி
தூயவ போற்றி துணையே போற்றி!

வாசவ போற்றி வாழ்வருள் போற்றி
கேசவ போற்றி கீர்த்தி போற்றி!

அரிராம் போற்றி அருளே போற்றி
பரிவே போற்றி பகலவ போற்றி!

தயவே போற்றி தந்தை போற்றி
அயன் அரன் போற்றும் அறமே போற்றி!

காளிங்க நர்த்தன கடவுள் போற்றி
வாலியை வதைத்த வலிவே போற்றி!

குன்றைக் குடையாய்ப் பிடித்தாய் போற்றி
ஒன்றாய் பலவாய் உடையாய் போற்றி!

ஏழு மலைமேல் இருந்தாய் போற்றி
வாழும் உயிர்களின் வாழ்வே போற்றி!

நீரில் நெருப்பாய் நிலைத்தாய் போற்றி
காரிருள் ஒளியாய்க் காண்பாய் போற்றி!

நாரணா போற்றி நம்பியே போற்றி
பூரணா போற்றி பொற்பதம் போற்றி!!

அலர்மேலு மங்கையின் ஆளனே போற்றி
நலமெனக் கருளும் நாதா போற்றி!

வாழ்க திருவருள் வையகம் போற்றி
வாழ்க திருமால் வரமருள் போற்றி!

★

# திருவரங்கா துயிலெழுக

சற்குருவே ஸ்ரீரங்கா சரணம்நீ எழுக
சாற்றினேன் தமிழ்மாலை சரணம்நீ எழுக!
போற்றினேன் பொற்பாதம் பொன்னேநீ எழுக
பொழுதெல்லாம் உறக்கமோ பூவேநீ எழுக!

ஏற்றுவாய் அருளொளி எந்தாய் நீ எழுக
எழுகதிர் ஞாயிறே எழுகநீ எழுக
ஆற்றுவாய் ஐந்தொழில் அரியேநீ எழுக
அகிலத்தில் அதர்மம் அழித்திட எழுக!

மாற்றறியாப் பசும்பொன்னே மணியே நீ எழுக
மனிதர்க்கு வாழ்வருள மதிபேநீ எழுக
காற்றாகிக் கனலாகி கதியேநீ எழுக
ககனத்தில் வெளியாகி கடலே நீ எழுக!

ஊற்றாகி உயிராகி உணர்வே நீ எழுக
உயிருக்குள் உயிராகி உயிரே நீ எழுக
நேற்றாகி இன்றாகி நெறியே நீ எழுக
நேர்மைக்குப் பொருளான நிறையேநீ எழுக!

போற்றித் துதிசெய்தோம் புருஷோத்மா எழுக
பூக்கும் மலர்வண்ண புதிதே நீ எழுக
சாற்றுக் கவிபாடி சாற்றினேன் எழுக
சாரங்கா! கோதண்டா! சியாமளா எழுக!

தரா எழுக
சங்கரன் போற்றிடும் சௌந்தர்யா எழுக
ஓம் எனும் உட்பொருள் உவப்பேநீ எழுக
ஒப்யார அலங்கார உருவேநீ எழுக!

அகங்காரக் கிழங்கினை அகற்றவே எழுக
அறியாமை அதர்மம் அகன்றிட எழுக
சுகமான வாழ்வருள சிவராம எழுக
சொந்தமே சொர்ணமே அரிராமா எழுக!

அஞ்சாத நெஞ்சனே ஆனந்தா நீ எழுக
அகம்புறம் நிறைந்தவா அச்சுதா நீ எழுக
பலராமன் தம்பியே பரசுராமா எழுக
பக்தியே முக்தியே சக்தியே நீஎழுக!

காஞ்சியின் கரியமால் வரதா நீ எழுக
கண்ணனே மன்னனே காப்பாற்ற எழுக
ஆஞ்ச நேயனின் அன்பனே எழுக
ஆதாரம் துணைநீயே அபயம்நீ எழுக!

தேனே திருமாலே தேவேநீ எழுக
திக்கற்ற பேருக்கு திருவருள் புரிக
கோனே தசரதன் கொழுந்தேநீ எழுக
கும்பிட்டு தொழுகின்றோம் குறைதீர்த்து அருள்க!

சூரியா சுந்தரா சுகமே நீ எழுக
சண்முகப் பிரியனே சந்தானா எழுக
ஏரி சூழ் நீர்மலை எம்பிரான் எழுக
எங்கும் திருவருள் எல்லோர்க்கும் அருள்க!

★

# நாரயணா ...! நாராயணா!

திருப்பதிக்கு வந்திருந்தேன் நாராயணா - நான்
திருமொட்டை அடிச்சிகிட்டேன் நாராயணா
உருப்படி யாகவேணும் நாராயணா - நீ
உறுதுணை யாகவேணும் நாராயணா!

தரிசனம் தந்திடனும் நாராயணா - பலர்
தரித்திரம் நீங்கிடனும் நாராயணா
சரித்திரம் படைத்தவனே நாராயணா - எங்கள்
சங்கடங்கள் தீர்ப்பவனே நாராயணா!

மனதுக்குள் இருப்பவனே நாராயணா - எங்கள்
மனசாட்சி யானவனே நாராயணா
வனவாசம் பூண்டவனே நாராயணா-அந்த
வானவரின் ஆண்டவனே நாராயணா!

தர்மம் தழைத்திடனும் நாராயணா - இங்கு
தானம் பெருகிடனும் நாராயணா
கர்மயோகம் சொன்னவனே நாராயணா - அன்று
கண்ணனாக வந்தவனே நாராயணா!

அந்தரங்கம் அறிந்தவனே நாராயணா-அந்த
அரங்கனும் ஆனவனே நாராயணா
நந்தகோபன் புத்திரனே நாராயணா - என்றும்
நல்லபிள்ளை யானவனே நாராயணா!

நாடு செழித்திடனும் நாராயணா - இங்கு
நல்லவர்கள் வாழ்ந்திடனும் நாராயணா
ஏடு சிறந்திடனும் நாராயணா - இங்கு
ஏழ்மை சிறுக்க வேணும் நாராயணா!

நரசிங்கப் பெருமானே நாராயணா-நாடு
நலம்பெற வேண்டுமய்யா நாராயணா
பரம்பொருள் என்பவனே நாராயணா-உயிர்ப்
பசிபோக்க வேண்டுமய்யா நாராயணா!

திருமாலே தெய்வமே நாராயணா - உன்
திசைநோக்கி வணங்கினோமே நாராயணா
தெரியாமல் செய்தபிழை நாராயணா - நீ
திருத்திட வேண்டுமய்யா நாராயணா!

உலகத்தை உண்டவனே நாராயணா - உன்
உருவத்தை யாரறிவார் நாராயணா
நிலமளந்த மாயவனே நாராயணா-உன்
நீலவண்ணம் யாரறிவார் நாராயணா!

அன்பு என்னும் விதைவிதைப்பாய் நாராயணா - அதில்
அறக்கதிர் விளைத்திடுவாய் நாராயணா
இன்பமென்னும் மரம்நடுவாய் நாராயணா - அதில்
என்றென்றும் நிழல் தருவாய் நாராயணா!

நோயற்ற வாழ்வருள்வாய் நாராயணா - மனம்
நொந்திடாத நிலையருள்வாய் நாராயணா
தாயாக உடனிருப்பாய் நாராயணா - எங்கும்
தாங்கிட வேண்டுமய்யா நாராயணா!

★

# வைகுந்தம் தெரிகிறது!

திருமால் அளந்த பூமியைக் கண்டேன்
திருவடி தெரிகிறது-அவன்
திருவடி உயர்ந்த வானத்தைக் கண்டேன்
திருவருள் புரிகிறது!

வானத்தில் குவியும் மேகத்தைக் கண்டேன்
வைகுந்தம் தெரிகிறது—அவன்
ஞானத்தைப் பொழிந்த கருணையைக் கண்டேன்
கதிரவன் உதிக்கிறது!

மண்ணில் காணும் மரஞ்செடி கொடிகள்
மாதவன் மணிமுடிகள் - அந்தக்
கண்ணன் காட்டிய கீதையைப் படித்தால்
காண்போம் மெய்வழிகள்!

மரஞ்செடி பூத்த மலர்களைக் கண்டேன்
மாயவன் தெரிகின்றான் - அந்தத்
தருமத்தின் தலைவன் தருநிழல் கண்டேன்
துளிர்நடைப் புரிகின்றான்!

புள்ளினம் கூவும் ஓசையைக் கேட்டேன்
புல்லாங் குழலல்லவா-இங்கு
மெல்லென வீசும் தென்றலைக் கேட்டேன்
மெய்ப்பொருள் அவனல்லவா!

நதிகள் எழுப்பிடும் ஓசையைக் கேட்டேன்
நாரணன் ஹரிமந்த்ரம் - அந்த
நாரணன் எதிலும் நிறைந்து இருக்கிறான்
நாதமே மனுதர்மம்!

ஆடும் தொட்டில் ஹரிஓம் நாமம்
அன்புடன் இசைக்கிறது-இங்கு
கூவும் குயில்கள் கோவிந்தன் நாமம்
கொஞ்சிக் குழைகிறது!

பாலுக்குள் நெய்யைப் பரிவுடன் வைத்து
பக்குவம் புரிகிறது-இரு
தோளுக்குக் கீழே கைகளை வைத்துத்
திறமிங்கே தெரிகிறது!

ஆட்டுக்கு வாலை அளவுடன் வைத்து
அதிசயம் புரிகிறது-இங்கு
அரும்பசிக் கென்றே பூமி விளைந்து
ஆனந்தம் தருகிறது!

இரவு கழிந்து பகலும் வந்திடும்
இயற்கையைத் தந்தவன் யார்? - உலகு
வரவு செலவு வாழ்க்கை என்பதை
வழிமுறை சொன்னவன் யார்?!

சத்தியம் காக்க சக்கரம் கொண்டது
சியாமளன் திருமால்தான்- அந்த
உத்தமன் நாமம் ஓதி யுணர்ந்தால்
உயிரினம் நல்வழிதான்!

★

# எல்லாமும் சின்ன கண்ணன்

தொட்டிலும் ஆட்டுகின்றான்
குழந்தையைக் கிள்ளுகின்றான்
மொட்டையும் அடிக்கவைப்பான்
முளைக்கவும் வழிகள் செய்வான்!

இலைக்கென கிளைகள் வைத்தான்
இலையுதிர்க் காலம் வைத்தான்
தலைக்கென அறிவு வைத்தான்
தலைக்கனம் அதிலே வைத்தான்!

அடிதடி சண்டை வைத்தான்
அதற்கொரு மன்றம் வைத்தான்
குடித்திட மதுவும் வைத்தான்
குடிக்கேடு எழுதி வைத்தான்!

உடம்பிலே எண்சாண் வைத்தான்
ஒரு சாணே வயிறு வைத்தான்
படித்திடப் பள்ளி வைத்தான்
பலபேரை தள்ளி வைத்தான்!

கடலோரம் மணலை வைத்தான்
கடல்மேலே அலையை வைத்தான்
கடல்நீரில் உப்பை வைத்தான்
கடல் காற்றில் சுகத்தை வைத்தான்!

கங்கையில் குளிக்க வைப்பான்
கடுங்குளிர் நடுங்க வைப்பான்
சங்கையும் ஊதி வைப்பான்
சமரசம் பேசி நிற்பான்!

தந்தைசொல் மதிக்க செய்வான்
தன்னையே முன்னே வைப்பான்
தந்தைதாய் சின்னக் கண்ணன்
தருமத்தை நிலைக்க வைப்பான்!

அவதாரம் பத் தெடுத்தான்
அதர்மத்தை அழிய வைத்தான்
தவத்தோர்க்கு மோட்சம் வைத்தான்
தவறுக்கு நரகம் வைத்தான்!

மனதிலே நினைவு வைத்தான்
மனச்சாட்சி அதிலே வைத்தான்
தனதான்யம் படைத்து வைத்தான்
தன்னலம் மறக்க வைந்தான்!

மனிதர்க்கு மனதை வைத்தான்
மறந்திட மறதி வைத்தான்
இனிமைக்கும் இறுதி வைத்தான்
இறந்திட பிறவி வைத்தான்!

எல்லாமும் சின்னக் கண்ணன்
இட்டம்போல் நடத்து கின்றான்
நல்லது வாழ என்றும்
நன்மைக்கு கடை விரித்தான்!

★

## காரணனே! பூரணனே!

திருப்பதி மலைமேல் இருப்பவனே
தேவர்கள் குறையைத் தீர்த்தவனே
திருமகள் போற்றும் மாலவனே
திருவடிப் பணிந்தோம் மாயவனே!

அரும்பெரும் கீதை மொழிந்தவனே
அரியும் சிவனும் ஆனவனே
திருவருள் புரியும் காரணனே
திருவரங்கா வெனும் பூரணனே!

சங்கொடு சக்கரம் கொண்டவனே
சதுர்மறை நான்கும் தந்தவனே
பொங்கும் பாற்கடல் துயில்பவனே
பூமி பாரத்தைக் குறைப்பவனே!

திங்கள் திகழொளி யானவனே
திருநீர் மலைவாழ் நாயகனே
பங்கயக் கண்ணன் என்பவனே
புத்தியும் புகழும் அளிப்பவனே!

சத்தியம் காக்கும் ஸ்ரீதரனே
சத்தியின் வடிவம் நீயவனே
முத்திரை நீக்கும் மூலவனே
முத்தியை அளிக்கும் மோகனனே!

★

# வருவான் அருள்வான் !

கண்ணன் எனக்குள் இருக்கின்றான் - என்
கண்ணின் மணியாய் ஒளிர்கின்றான்
உண்ணும் உணவைத் தருகின்றான்-அவன்
உயிருக் குயிராய் நிலைக்கின்றான்!

மண்ணில் நீராய் சுவையானான்-எல்லா
மரத்திலும் அவனே கனியானான்
எண்ணும் நினைவில் இதமானான்-அவன்
எங்கும் எதிலும் இனிப்பானான்!

மண்ணில் உப்பெனப் பூத்திருப்பான்-அவன்
மணியில் ஒளியாய் ஆர்த்திருப்பான்
விண்ணில் வெளியாய் விரிந்திப்பான்-அவன்
வீட்டிலும் ஏட்டிலும் விளைந்திருப்பான்!

நீருக்குள் அவனே நெருப்பானான் - அந்த
நெருப்பிலும் ஒளியாய் அவனானான்
மார்கழி மாதப் பனியானான் - அவன்
மாரி வழங்கிடும் நிதியானான்!

தருமத்தின் தலைவன் அவனாகும் - எல்லா
தானமும் தவமும் அவனாகும்
பெருமா ளென்னும் பேராகும் - இங்கு
பெண்ணும் ஆணும் அவனாகும்!

நன்மைக்கும் தீமைக்கும் இடையிருப்பான்
நல்லதை மட்டும் வரவிடுப்பான்
உன்னிலும் என்னிலும் ஒருவனவன் - அந்த
உண்மையை உணர்த்தும் கண்ணனவன்!

மேகத்தில் நின்று மழையளிப்பான் - அவன்
மெய்யும் பொய்யும் தானறிவான்
யோகமும் ஞானமும் தானளிப்பான் - சிவ
யோகத்தைப் புகட்டி அருள்கொடுப்பான்!

மரங்களின் வேருக்கும் நீரளிப்பான்-அவன்
மலைகளின் உச்சிக்கும் வளங்குவிப்பான்
வெயிலிலும் மழையிலும் காத்திடுவான் - பிறர்
வேண்டுதற் கேற்பவும் கைகொடுப்பான்!

மரங்களில் அவனே அரசமாம்-அந்த
மாவிலைத் தோரணம் தரிசனமாம்
பறவையில் அவனே மயிலினமாம் - அந்த
பலநிற மலர்கள் அவனுடையாம்!

மாதவன் கேசவன் பல பெயர்கள்-அந்த
மாலவன் அழகில் பலநிறங்கள்
ஆதவன் யாதவன் வீறுடையான் - தன்
அன்பரைக் காக்கும் அருளுடையான்!

வருவான் அருள்வான் காத்திருங்கள்-திரு
வேங்கடம் சென்று வழிபடுங்கள்
தருவான் நன்மைகள் உணர்த்திடுங்கள் - அவன்
தாளிணைப் பணிந்து வளம்பெறுங்கள்!

★

# திருமலைப் பத்து !

சேனாபதிகளில் ''சேந்தனும்'' நீயென
சொல்லவும் கேட்டு விட்டேன்!
செடிகொடி மரங்களில் 'அரசனும்' நீயென்று
சேவித்து வணங்கி விட்டேன்!

கான்வாழும் 'மயில்' கூட கரியமால் நீயென்று
கீதையில் படித்து விட்டேன்!
காட்டாறு குளம்குட்டைக் காவலன் நீயென்று
கண்டுநான் போற்றிவிட்டேன்!

வானமும் 'நீல' வண்ணமும் நீயென்று
வரலாறு படித்து விட்டேன்!
வனவாசம் போனது 'வைகுந்தன்' நீயென்று
வாயாரப் புகழ்ந்து விட்டேன்!

தூணின்று வெளிப்பட்ட தூயனைப்! பாடி நான்
தொல்லைகள் நீக்கி விட்டேன்
திருமலை திருப்பதி தெய்வமே கதியென்று
திருவடி சரண் புகுந்தேன்!

---

திருமங்கையாழ்வார் வேங்கடவனைப்
பாடியருளிய பெரிய திருமொழிப் பாடலிது!

---

கொங்கலர்ந்த மலர்க்குருந்தம் ஒசித்த கோவலன் எம்பிரான்
சங்கு தங்கு தடங்கடல் துயில்கொண்ட தாமரைக் கண்ணினன்
பொங்கு புள்ளினை வாய்பிளந்த புராணர் தம்மிடம் பொங்குநீர்
செங்கயல் திளைக்கும் சுனைத்திரு வேங்கடம் அடைநெஞ்சமே!

இரக்கமே யில்லாத இராவணன் அழிந்திட
இராமனாய் அவ தரித்தாய்!
இதிகாச புராணங்கள் யாவுமே நீயென்று
இருடிகள் துதிக்க வைத்தாய்!

அரக்கனாம் கம்சனின் அவத்தைக்கு ஆளாகி
அரிகிருஷ்ணன் பே ரெடுத்தாய்!
அன்னையாம் தேவகி வயிற்றிலே பிறந்து
ஆயர்க்கு காப் பளித்தாய்!

புரமெரி செய்தவன் போற்றிட அன்று நீ
பூமியைத் துளைக்க லுற்றாய்!
புவனங்கள் ஈரேழும் படைத்திட்டு நன்று நீ
பிறவிகள் பத் தெடுத்தாய்!

மரவுரி தரித்துமே மாதவர் போற்றிட
மனுநீதி ஆட்சி செய்தாய்!
மறைகூறும் வேங்கட மலைவாழும் வேதலே
மாதவா! அருள் செய்வாயே!

---

**திருமங்கையாழ்வார் வேங்கடவனைப் பாடியருளிய பெரிய திருமொழிப் பாடலிது!**

---

பள்ளியாவது பாற்கடல் அரங்கம் இரங்கவன் பேய்முலை
பிள்ளையா யுயிருண்ட வெந்தைபிரான் அவன்பெருகும் இடம்
வெள்ளியான் கரியான் மணிநிறவண்ணன் என்றெண்ணி நாடோறும்
தெள்ளியார் வணங்கும் மலைத் திருவேங்கடம் அடைநெஞ்சமே!

இரணியன் என்னுமோர் அசுரனை வதம்செய்து
இரட்சித்து அருள் புரிந்தாய்!
அரவணைப் பள்ளியில் அரிதுயில் மாலென
அகிலத்தை ஆண்டு நின்றாய்!

இரவுபகல் எல்லாமும் இராகவா நீயென்று
ஐம்பூதம் தனை படைத்தாய்!
இனிவரும் பிறவிக்கு ஏதென இரங்கிநீ
எண்ணிலா கருணை வைத்தாய்!

அரன்அயன் ஆகிநீ ஐந்தொழில் செய்துமே
அரியென்னும் புகழ் படைத்தாய்!
அகலிகை என்பவள் சாபத்தை நீக்கியே
அரிநீயே அருள் கொடுத்தாய்!

முரஹரி மாதவா முறையிடும் பக்தர்க்கு
முழு நேரம் காட்சி தந்தாய்!
மும்மலம் நீங்கிட திருமலைப் பதிவாழும்
முகுந்தனை சரண் புகுந்தேன்

---

**திருமங்கை யாழ்வார் வேங்கடவனைப்**
**பாடியருளிய பெரிய திருமொழிப் பாடலிது!**

---

நின்றமாமரு திற்றுவீழ நடந்த நின்மலன் நேமியான்
என்றும் வானவர் கைதொழும் இணைத் தாமரையடி எம்பிரான்
கன்றி மாரிபொழிந்திடக் கடிது ஆநிரைக்கிடர் நீக்குவான்
சென்று குன்றம் எடுத்தவன் திருவேங்கடம் அடைநெஞ்சமே;

★

குள்ளனாய் நெடியனாய் கோணாத வடிவனாய்
குருவாகி நிற்கும் மாலே!
குறையாத செல்வமும் குமட்டாத வாழ்வையும்
கொடுக்க நீ நெடிய மாலே!

உள்ளத்தில் உறுதியும் ஓங்குபுகழ் வெற்றியும்
ஒருங்கேநீ அருள்க மாலே!
ஒருபோதும் உன்பாதம் மறவாமல் இருந்திட
உதவுக செங்கண் மாலே!

தள்ளாத வயதிலும் தானமும் தருமமும்
தடையின்றி உதவும் மாலே!
தன்னலம் தற்பெருமை தயவின்றி சுடுசொல்லும்
தவிர்த்திட உதவு மாலே!

கொள்ளிடம் காவேரிக் கிடையிலே அரங்கனாய்
கோயில்நீ கொண்ட மாலே!
குறைதீர்க்கும் திருமலைக் கொண்டலே அண்ணலே
கோபாலா! அருள் செய்வாயே!

---

**திருமங்கையாழ்வார் வேங்கடவனைப் பாடியருளிய பெரிய திருமொழி பாடலிது!**

---

பார்த்தற் காயன்று பாரதங்கை செய்திட்டுவென்ற பரஞ்சுடர்
கோத்தங் காயர்தம் பாடியில் குரவை பிணைந்த எம்கோவலன்
ஏத்துவார்தம் மனத்துள்ளான் இடவெந்தை மேவிய எம்பிரான்
தீர்த்தநீர்த் தடஞ்சோலை சூழ்திரு வேங்கடம் அடைநெஞ்சமே!

காதலால் கோபியர் கைதொழ நின்று நீ
கண்ணனைக் கண்டு கொண்டேன்!
கருணையை வேண்டிடும் தவசிகள் முனிவர்கள்
கண்ணிலுன் தயவு கண்டேன்!

ஆதவன் நீயென அயன்அரன் துதித்திட
ஆக்கினைக் கண்டு கொண்டேன்!
அறியாமல் செய்கின்ற பிழைகளை நீக்கிடும்
அலங்காரன் அருள் உணர்ந்தேன்!

ஆதாரம் நீயென்று அபயக் குரல்கேட்டு
ஆனைக்கு அருள் புரிந்தாய்!
ஆதிமூலமே! ஆபத்பாந்தவா! யென்றலறிய பாஞ்சாலி
அவமானம் காத்து வைத்தாய்!

தூதனாய் தொண்டனாய் துணைநின்று ஐவர்க்கு
துவளாத வெற்றி தந்தாய்!
திருமலை திருப்பதி தலம்நின்று அருள்கின்ற
திருமாலே! அருள் செய்வாயே!

---

## திருமங்கையாழ்வார் வேங்கடவனைப் பாடியருளிய பெரிய திருமொழி பாடலிது!

---

வன்கையான் அவுணர்க்கு நாயகன் வேள்வியிற்சென்று
அணியாய்
மண்கையால் இரந்தான் மராமரன் ஏழும்எய்த வலத்தினான்
எண்கையான் இமயத்துள்ளான் இருஞ்சோலை மேவிய
திண்கைம் மாதுயர் தீர்த்தவன் திருவேங்கடம் அடைநெஞ்சமே!

ஒன்பது கிரகங்கள் உன்வசம் இருந்திட
உனக்கென்ன தலை யெழுத்து?
ஒவ்வொரு யுகத்திலும் ஓயாமல் உழைத்திட
உனக்கென்ன தலை வலிப்பு?

அன்பர்க்கு அருளவும் அரிதுயில் நீங்கிட
அவசரம் உனக் கெதற்கு?
அயன் அரன் இருந்திட அவதாரம் பலவேஷம்
அவத்தைகள் ஏன் எதற்கு?

உன்மார்பில் குடிகொண்ட திருமகள் இருந்திட
ஓயாத கவலை எதற்கு?
ஓராயிர தெய்வங்கள் உன்பேச்சைக் கேட்டிட
உறங்காத நிலை எதற்கு?

அன்றுபல யுகங்களில் அவதாரம் எடுத்தது
அதுபோதும் இனி எதற்கு?
அழகான திருப்பதி அருள்கின்ற திருமலை
அடியேற்கு அருள் செய்வாயே!

---

**திருமங்கையாழ்வார் வேங்கடவனைப்**
**பாடியருளிய பெரிய திருமொழிப் பாடலிது!**

---

எண்திசைகளும் ஏழுலகமும் வாங்கிப் பொன்வயிற்றில் பெய்து
பண்டோ ராலிலைப்பள்ளி கொண்டவன் பான்மதிக்கிடர்
தீர்த்தவன்

ஒண்திறல் அவுணன் உரத்துகிர் வைத்தவன் ஒள்ளெயிற்றொடு
திண்திறல் அரியாயவன் திருவேங்கடம் அடைநெஞ்சமே!

மண்ணுண்ட மாயவா மண்ணுண்டு உமிழ்ந்தபின்
மண்ணெல்லாம் ஈர மாச்சு!
மண்மீது நடந்துநீ மகிழ்ந்தாடி ஓடவும்
மனையெல்லாம் பொறைக ளாச்சு!

கண்ணனாய்க் களம்நின்று காத்தருள் செய்தபின்
கலியுகம் நிலைக்க லாச்சு!
காஞ்சியில் வரதனாய் கண்மூடிப் படுத்ததும்
கழனிகள் விளைய லாச்சு!

அண்டர் குழாத்துடன் அரக்கரை வென்றபின்
அகிலத்தில் அமைதி யாச்சு!
அன்பினால் நின்பாதம் அடியார்கள் வாழ்த்தவும்
அச்சமும் விலகிப் போச்சு!

கொண்டல் மேனியன் குடிவாழும் திருமலை
குறைதீர்க்கும் தலமு மாச்சு!
கோவிந்தா! கோபாலா! குறைகளை அறிவாய்நீ
குருவேநீ அருள் செய்வாயே!

---

## திருமங்கையாழ்வார் வேங்கடவனைப் பாடியருளிய பெரிய திருமொழிப் பாடலிது!

---

பாரும் நீ ரெர் காற்றினோ டாகாசமும் இவையாயினான்
பேருமாயிரம் பேசநின்ற பிறப்பிலி பெருகும் இடம்
காரும் வார்பனி நீள்விசும்பிடைச் சோருமா முகில் தோய்தர
சேரும் வார்பொழில் சூழெழில் திருவேங்கடம் அடைநெஞ்சமே.

ஆயிரம் தெய்வங்கள் அகிலத்தில் நிலைந்தாலும்
அவர்க்கெல்லாம் தலைவன் நீயே!
ஆயிரம் தெய்வத்தின் அவதாரம் நீயன்றோ
அருள்தரும் கடவுள் நீயே!

கோயிலை வடித்ததும் குருக்களைப் படைத்ததும்
கொடைதந்த இறைவன் நீயே!
கொடுப்பதும் கொள்வதும் எடுப்பதும் தொடுப்பதும்
குணங்குறி யல்லன் நீயே!

அயன்அரன் ஆதிசக்தி அருள்முருகன் கணபதி
அனைத்தும்நின் வடிவம் தாயே!
அழிப்பதும் காப்பதும் அருள்வதும் ஆக்குவதும்
அத்வைதம் துவைதம் நீயே!

தீவினை அகற்றிடும் திருமாலே மணிவண்ணா
தேசங்கள் பலவும் நீயே!
திருமலைப் பதிநின்று தேவர்க்கு அருள்கின்ற
திருவேநீ அருள் செய்வாயே!

---

**திருமங்கையாழ்வார் வேங்கடவனைப்**
**பாடியருளிய பெரிய திருமொழி பாடலிது!**

---

அம்பரம் அனல்கால் நிலம்சலம் ஆகுநின்ற அமரர்கோன்
வம்புலர் மலர்மேல்மலி மடமங்கை தன்கொழுநன் அவன்
கொம்பின் அன்ன இடை மடகுற மாதர்கள் இதணந்தொறும்
செம்புனம் அவை காவல்கொள் திருவேங்கடம் அடைநெஞ்சமே

அடிமைக்கு வாழ்வுதர ஆகாதோ ஐயனே
அடியேனும் அடிமை யன்றோ!
அன்பர்கள் திருக்கூட்டில் அடியேனும் ஒருவனே
அறியாத சிறுவ னன்றோ!

இடிக்கின்ற மழை மேகம் இளங்காற்று குளிர் தென்றல்
எல்லாமே நீயே யன்றோ!
இயலாமை இல்லாமை கல்லாமை யாதொன்றும்
யாதுக்கும் பொறுப்பு அன்றோ!

முடிவுநீ முதலும்நீ முடிவில்லா நிலையும்நீ
முற்றிலும் நீதா னன்றோ!
மோகமும் சோகமும் முட்டாளும் ஞானியும்
முழுமையாய் நீயே யன்றோ!

தடிகொண்டு அடித்தாலும் தாயாகப் பற்றுவேன்
தனயனெனை காப்ப தென்றோ!
தேவர்கள் புடைசூழ திருமலைத் தலம்மேவும்
திருவேங்கடம் நீ அருள் செய்வாயே!

---

**திருமங்கையாழ்வார் வேங்கடவனைப்**
**பாடியருளிய பெரிய திருமொழி பாடலிது?**

---

பேசும்இன் திருநாமம் எட்டெழுத்தும் சொல்லிநின்று பின்னரும்
பேசுவார் தமையுய்ய வாங்கிப் பிறப்பறுக்கும் பிரானிடம்
வாசமாமலர் நாறுவார்பொழில் சூழ்தரும் உலகுக்கெல்லாம்
தேசமாய்த் திகழும் மலைத் திருவேங்கடம் அடைநெஞ்சமே!

ஆசையும் விலகிட நேசமும் பெருகிட
ஐயநீ உதவ வேண்டும்!
அடிதடி சண்டைகள் ஆபத்து யாதொன்றும்
அவசியம் தடுக்க வேண்டும்!

பாசமும் பந்தமும் பற்றற்று இருந்திட
பரந்தாமா! அருள வேண்டும்!
பலகாலம் நோயினால் படுக்கையில் கிடவாமல்
பரிதாபம் காட்டவேண்டும்!

நாசங்கள் விளையாமல் நன்மைகள் மாறாமல்
நாடோறும் விளங்க வேண்டும்!
நட்புபகை இல்லாமல் நற்பண்புப் பொருந்திட
நாரணா உதவ வேண்டும்!

தேசங்கள் தோறும்நீ திருவலம் வந்துமே
திருப்தியை விதைக்க வேண்டும்!
திருமலைப் பதிவாழும் திருமாலே பெருமானே
தெய்வமே அருள் செய்வாயே!

---

## திருமங்கையாழ்வார் வேங்கடவனைப் பாடியருளிய பெரிய திருமொழிப் பாடலிது!

---

செங்கயல் திளைக்குஞ்சுனைத் திருவேங்கடத்துத் துறை செல்வன்

மங்கையர்தலைவன் கலிகன்றி வண்டமிழ்ச் செஞ்சொல்

சங்கையின்றித் தரித்துரைக்க வல்லார்கள் தஞ்சம தகாவே

வங்கமாகடல் வையங் காவலர் ஆகி வானுலகு ஆள்வரே!

# கருணைக் கடல்

ஹரி கோவிந்தம் ஹரி கோவிந்தம்
அறிவே குருவே ஹரி கோவிந்தம்
ஹரி கோவிந்தம் ஹரி கோவிந்தம்
அன்பே சிவமே ஹரி கோவிந்தம்!

கர்ம யோகமே ஹரி கோவிந்தம்
கடமை ஞானமே ஹரி கோவிந்தம்
தர்ம சாதனம் ஹரி கோவிந்தம்
தயவு சாகரம் ஹரி கோவிந்தம்!

செல்வ பாக்கியம் ஹரி கோவிந்தம்
சிறந்த வாக்கியம் ஹரி கோவிந்தம்
நல்ல பெருமாள் ஹரி கோவிந்தம்
நன்மை கூறுவான் ஹரி சோவிந்தம்!

கேளாது கொடுப்பான் ஹரி கோவிந்தம்
கேண்மை வளர்ப்பான் ஹரி கோவிந்தம்
மாட்சிமை அளிப்பான் ஹரி கோவிந்தம்
மனதில் இருப்பான் ஹரி கோவிந்தம்!

வறுமை ஒழிப்பான் ஹரி கோவிந்தம்
வசந்த மளிப்பான் ஹரி கோவிந்தம்
திருவும் கல்வியும் ஹரி கோவிந்தம்
திருப்பதி வாழ்வான் ஹரி கோவிந்தம்!

☆

சாந்தி யளிப்பவன் ஹரி கோவிந்தம்
சமரசம் அவனே ஹரி சோவித்தம்
சிந்தனை யாவும் ஹரி கோவிந்தம்
சித்தியும் பக்தியும் ஹரி கோவிந்தம்!

கருணைக் கடலே ஹரி கோவிந்தம்
கண்ணுக் கினியன் ஹரி கோவிந்தம்
அறநெறிச் சாரம் ஹரி கோவிந்நம்
அறம் பொருள் இன்பம் ஹரி கோவிந்தம்!

அமலனும் விமலனும் ஹரி கோவிந்தம்
ஆதியும் சோதியும் ஹரி கோவிந்தம்
நிமலனும் நிட்டையும் ஹரி கோவிந்தம்
நீதியும் நேர்மையும் ஹரி கோவிந்தம்!

பாற்கடல் வண்ணன் ஹரி கோவிந்தம்
பாப நாசனன் ஹரி கேரவிந்தம்
கார்முகில் கண்ணன் ஹரி கோவிந்தம்
காஞ்சியின் வரதன் ஹரி கோவிந்தம்

அரகர சிவசிவ ஹரி கேரவிந்தம்
அரிஅரி சிவ ஹரி ஹரி கோவிந்தம்
பரம்பொருள் பரசிவம் ஹரி கோவிந்தம்
பகலவன் மாலவன் ஹரி கோவிந்தம்!

அரியும் சிவனும் ஒன்றே யாகும்
அகரமும் ஆதியும் அவனே யாகும்
கரிமுகன் கந்தன் அவனே யாகும்
காளியும் துர்க்கையும் அவனேயாகும்!

☆

## திருவடி சரணம்!

திருமால் சரணம் திருவடி சரணம்
பெருமாள் சரணம் பெரியோய் சரணம்
அருளே சரணம் அதிபா சரணம்!
குருவே ரரணம் கோனே சரணம்!
அரங்கா சரணம் அழகா சரணம்
பரமே சரணம் பதமே சரணம்
அரியே சரணம் அறமே சரணம்
வரமே சரணம் வருவாய் சரணம்!

சந்தியம் நீயே சரணம் சரணம்
சித்தியும் நீயே சரணம் சரணம்
முத்தியும் நீயே சரணம் சரணம்
சக்தியும் நீயே சரணம் சரணம்!

புத்தியும் பக்தியும் புகல்வாய் சரணம்
போக போக்கியம் அருள்வாய் சரணம்
பத்தவ தாரனே சரணம் சரணம்
பரந்தாமன் நீயே சரணம் சரணம்

சங்கொடு நிற்பவன் சரணம் கரணம்
சாந்தி யளித்திட சரணம் சரணம்
எங்கும் திருவருள் சரணம் சரணம்
எந்தாய் பரம்பொருள் ஈசா சரணம்!

திருவடி சரணம் திருவடி சரணம்
திருப்பதி மலையான் திருவடி சரணம்
திருவடி சரணம் திருவடி சரணம்
திருமகள் மார்பன் திருவடி சரணம்!

நின்றான் கிடந்தான் திருவடி சரணம்
நடந்தான் உயர்ந்தான் திருவடி சரணம்
கன்றினை மேய்த்தவன் கழலிணை சரணம்
காமக் குரோதம் கடந்தவன் சரணம்!

மண்ணை உண்டவன் மலரடி சரணம்
மாதவன் யாதவன் மலர்ப்பாதம் சரணம்
விண்ணை அளந்தவன் வெற்றிக்கு சரணம்
விஸ்வ ரூபனே சரணம் சரணம்!

சீனி வாசனே சரணம் சரணம்
சீதையின் ஆளனே சரணம் சரணம்
ஆனியில் மஞ்சனம் அச்சுதா சரணம்
அகம்புறம் இகபரம் சரணம் சரணம்!

குன்றைக் குடையாய்ப் பிடித்தாய் சரணம்
கோதண்ட ராமா சரணம் சரணம்
என்றும் நின்னடி சரணம் சரணம்
ஏழுமலையான் திருவடி சரணம்!

வைகுந்த வாசா சரணம் சரணம்
வருக வருகவே சரணம் சரணம்
வையகம் வாழ்ந்திட சரணம் சரணம்
வருவாய் அருள்வாய் சரணம் சரணம்!

★

# அவனருள் பெறுகின்றார்!

குருவாயூரில் குழந்தை வடிவில்
திருமால் சிரிக்கின்றான் - அவன்
திருப்பதி மலைமேல் கோவிந்த னாக
திருவருள் புரிகின்றான்!

திருவரங்கா வென தேவர்கள் சூழ்ந்து
திருவடிப் பணிகின்றார் - அவன்
திருவல்லிக் கேணியில் பார்த்த சாரதி
தரிசனம் தருகின்றான்!

திருநீர் மலையிம் நீர்வண் ணனாக
சேவித்து மகிழ்கின்றார் - அந்த
சோளிங்கர் மலையில் நரசிம்பனாக
சொந்தத்தைச் சொல்கின்றார்!

கரிவரதாவென காஞ்சியில் பக்தர்கள்
கருணையைக் கேட்கின்றார் - அங்கு
ஹரிஹரி யென்றே ஆனந்த நடனம்
அவனருள் பெறுகின்றார்!

கிருஷ்ணா கிருஷ்ணா கிருஷ்ணா என்றே
கோயிலை வலம்வருவார் - அந்த
கிருஷ்ணனின் கீதையை நெஞ்சினில் நினைந்து
காட்சியைக் காண்கின்றார்

✱

# ஏது மறியாத என் மனம்!

## இசைப் பாடல்

### பல்லவி

கண்ணனை விரும்பினான் காதலித்தேன் - அவன்
கல்மனம் அறியாமல் பரிதவித்தேன்

### அனுபல்லவி

இன்னமும் அவன்மனம் இளகவில்லை - அவன்
என்னிடம் வரும்வரை விடுவதில்லை

(கண்ணனை)

### சரணம்

தந்தைத் தாயைப் பிரிந்திருந்தான் - அவன்
தனித்தே வேறிடம் வளர்ந்திருந்தான்
தருமத்தைக் காத்திட பிறந்திருந்தான் - அந்தத்
தலைவனே என்னைக் கவர்ந்திருந்தான்!

(கண்ணனை)

மாடுகள் மேய்த்ததை நானறிவேன் - அந்த
மாதவன் குணங்களை நான்மறவேன்
பேடுகள் போன்ற கோபியர் நெஞ்சில் - சிறு
பிள்ளைப்போல் இருந்ததை நான்புகழ்வேன்!

(கண்ணனை)

சூழ்ச்சிகள் அவனை சூழ்ந்த தில்லை - பெரிய
சூத்திர தாரியும் அவனாவான்
வாழ்வும் தாழ்வும் அவனறிவான் - ஒரு
வஞ்சகம் சூழ்ந்திட அவன் வருவான்!

(கண்ணனை)

மாதவர் போற்றும் மதியுடையான் - என்
மனதுக்கு இசைந்த பதிஅவன்தான்
ஏதும் அறியா என் மனத்தில் - அவன்
என்றைக்கும் இருந்திட மனம்விழைவான்!

(கண்ணனை)

# தப்பித்துப் போகாமல் பாருங்கடி

## இசைப் பாடல்

### பல்லவி

பாரடி அங்கே கோபியரே - அந்த
பாலேடு திருடும் கண்ணனையே!

### அனுபல்லவி

தூணோடு சேர்த்துக் கட்டுங்கடி - அவன்
தொட்டுப் பிடிக்காமல் பாருங்கடி

### சரணம்

குழந்தைக் கண்ணனை யாரடிப்பார் - அவன்
கொஞ்சலில் தன்னையே தான் மறப்பார்
பிஞ்சுக் கரங்களை யார் பிடிப்பார் - அவன்
புன்னகை சிந்திட தான் மறப்பார்

(பாரடி)

பாலுரி யருகே அவனிருப்பான் - மெல்ல
பக்குவமாக பதுங்கிச் செல்வான்
யாரு மறியாமல் திருடிவைப்பான் - அந்தத்
திருடனனின் கன்னத்தைக் கிள்ளுங்கடி!

(பாரடி)

கிள்ளினால் தனக்குக் காதல் வரும் - அந்தக்
கிளிமொழி ராதையும் சொல்லுகிறாள்
தள்ளியே போங்கடி நானவனை - அவன்
தப்பித்துப் போகாமல் பார்த்திருப்பேன்!

(பாரடி)

சொன்னவள் கண்ணனைந் தொட்டுவிட்டாள்
சுயநினை வின்றியே மயங்கு கிறாள்
கண்ணில் கண்ணீர் பெருக நின்றாள்
கண்ணனை எண்ணியே களிக்கின்றாள்!

(பாரடி)

# வாழ்த்துக்கள் பாடுங்கடி !

## இசைப் பாடல்

**பல்லவி**

மார்கழி பிறந்தது பனிக்குளிர் வந்தது
மாதவன் புகழைப் பாடுங்கடி

**அனுபல்லவி**

கார்முகில் கண்ணன் கரிமுகில் வண்ணன்
கழலிணைப் பணிந்து பாடுங்கடி

(மார்கழி)

**சரணம்**

சாரதி கண்ணன் கீதையில் சொன்னதை
சாந்தம் அதனைப் பாடுங்கடி - அந்த
பாரதப் போரின் பாண்டவர் துணைவனை
பதமலர்ப் பணிந்து பாடுங்கடி!

(மார்கழி)

தாய்வழி மாமன் கம்சனைக் கொன்றவன்
தருமத்தை சொல்லிப் பாடுங்கடி - அவன்
காய்கனி தின்று கானகம் திரிந்தவன்
கோசல ராமனைப் பாடுங்கடி!

(மார்கழி)

திருப்பதி மலைமேல் திருவாய் நின்றவன்
திருவருள் கேட்டுப் பாடுங்கடி - அவன்
தேனாய்ப் பாலாய் பழமாய் இனிப்பான்
தெய்வத்தை வேண்டிப் பாடுங்கடி

(மார்கழி)

ஆண்டாள் சூடிய பாவையின் தலைவனை
ஆடிப்பாடியே வேண்டுங்கடி - அந்த
ஆண்டவன் மலரடி ஆறுதல் தருமென
ஆனந்தங் கொண்டு பாடுங்கடி

(மார்கழி)

# காலச் சக்கரம்

மறந்து விட்டேன்நான் மறந்துவிட்டேன்
மண்ணில் பிறந்ததும் மறந்து விட்டேன்
மறந்து விட்டேன்நான் மறந்துவிட்டேன்
மனிதன் அதனால் மறந்து விட்டேன்!

பிறவிகள் தோறும் உடனிருந்தான்
பெருமாள் என்னும் பேருடையான்
அறமும் பொருளும் எனக்களித்தான்
அறிவே உருவாய் அறிவுரைத்தான்!

நல்லதும் கெட்டதும் அவன் கையில்
நடப்பதும் தடுப்பதும் அவன் கையில்
வல்ல சக்கரம் அவன் கையில்
வல்வினை அறுப்பான் திரு வருளில்!

புண்ணியம் பாவம் தருபவன் அவனே
புதுப்புது பிறவிகள் தருபவன் அவனே
எண்ணிய கருமம் முடிப்பவன் அவனே
எங்கும் நிறைந்த பரம்பொருள் அவனே!

கால சக்கரம் சுழன்று வரும்
கண்ணன் எதையும் மறப்பதில்லை
ஞாலத்தில் மனிதரின் பிறப்புவரும்
நடந்தது எதுவும் நினைவிலில்லை!

★

# வரவேண்டும் திருமாலே!

வரவேண்டும் வரவேண்டும் திருமாலே - எங்கள்
வாழ்வுசிறக்க வரம்வேண்டும் பெருமாளே
தரவேண்டும் தரவேண்டும் திருமாலே - உலகில்
தானதருமம் தழைக்கவேண்டும் பெருமாளே!

நீதி நேர்மை நிலைக்க வேண்டும் திருமாலே - யாரும்
நெஞ்சில்அன்பு நேசம் வேண்டும் பெருமாளே
சாதிமத சண்டை ஒழிந்து திருமாலே - எங்கும்
சமரசமே நிலவ வேண்டும் பெருமாளே!

வஞ்சம்பஞ்சம் நீங்க வேண்டும் திருமாலே - மனிதர்
வாழும் நெறியை வகுக்கவேண்டும் பெருமாளே
தஞ்சமுந்தன் திருவடிக்கே திருமாலே - மனிதர்
தன்னலத்தை மாற்றவேண்டும் பெருமாளே!

ஆதிமூல மானபொருள் திருமாலே - மண்ணில்
அமைதி சாந்தி நிலவவேண்டும் பெருமாளே.
வாதுவம்பு ஒழிய வேண்டும் திருமாலே - இங்கு
வறுமைசிறுமை மாறவேண்டும் பெருமாளே!

வேண்டும்வரம் நீயருள்வாய் திருமாலே - திரு
வேங்கடத்தில் இருப்பவனே பெருமாளே
பாண்டவர்க்கு தூதுசென்ற திருமாலே - எங்கள்
பக்கம்வந்து அருளவேண்டும் பெருமாளே!

★

# மாயா சக்தி !

சங்கொடு சக்கரம் பிடித்த கரங்களை
சாமரம் வீசி குளிர வைப்போம்!
சிங்கவதாரன் கோபங்கள் தணிந்திட
சந்தனம் பூசி மகிழ வைப்போம்!

ராமவ தாரன் இவனே யென்றால்
சீதையை இங்கே வர வழைப்போம்!
ராதையின் கண்ணன் இவனே யென்றால்
ராதையை இங்கே வர வழைப்போம் !

குள்ள வடிவினன் வாமனரூபன்
கொண்டலின் திருவடி கைதொழுவோம் !
மச்சவதாரன் மலரடி தொழுது
மனிதப் பிறவியின் பயன் பெறுவோம் !

கூர்மவ தாரத்தில் உலகை மீட்டவன்
கூர்த்த அறிவினைப் போற்றிடுவோம்!
தேரினை ஓட்டிய திருமால் திருவடி
தினம்தினம் பாடிப் பணிந்திடுவோம் !

மாயமோகினி வடிவத்தைக் கொண்டவன்
மாயா சக்தியை வணங்கிடுவோம் !
தாய்போல் கருணை தந்திடும் தலைவனின்
தாமரைத் திருவடி சரண் புகுவோம் !

❋

## விஸ்வரூப தரிசனம் !

திருமால் வாழும் திருமலைத் தேடி
தேவர்கள் வருகின்றார் - அவன்
திருவடி தரிசனம் தினம்தினம் கண்டு
தேவர்கள் மகிழ்கின்றார் !

சங்குடன் சக்கரம் நாம தரிசனம்
சாந்தமே பெறுகின்றார் - பல
தேசங்கள் தோறும் பக்தர்கள் திரண்டு
தெய்வத்தைப் பணிகின்றார் !

யோக நரசிம்மன் தரிசனம் காண்பவர்
யுக்தியைப் பெறுகின்றார் - அவன்
போகத்தை அருளும் புண்ணியன் என்பதைப்
புரிந்தே மகிழ்கின்றார் !

வராகன் வாழும் புஷ்கலம் சென்று
வணங்குதல் செய்கின்றார் - அவன்
வரங்களைத் தந்து திருமகள் தரிசனம்
வழங்கிடப் பெறுகின்றார் !

விஸ்வரூப தரிசனம் வாழ்வில்
வெற்றியைத் தந்துவிடும் - அந்த
வேங்கடேஸ்வரன் திருவருள் என்றும்
வேண்டிட பொருள் கிடைக்கும் !

★

# நானும் அவனும் அவதாரம்!

மனமே என்சொல் கேட்டுவிடு - அந்த
மாதவன் திருவடி காட்டிவிடு
தினமும் உனக்குத் தேன் தருவேன் - உன்
திறமையைப் போற்றி நான் புகழ்வேன்!

மாதவன் மாயவன் வாழும் இடம் - என்
மனமே உனக்குத் தெரிந்ததுதான் - மது-
சூதனன் எனக்குள் மறைந்த இடம் - அவன்
சூக்குமம் உனக்குத் தெரிந்தது தான்!

இரவும் பகலும் விழித் திருப்பான் - அவன்
இமையா திருந்து அறம் வளர்ப்பான்
புறத்திலும் அகத்திலும் தனித்திருப்பான் - பலர்
புரிந்திட சமயத்தில் கை கொடுப்பான்!

நானும் அவனும் அவ தாரம் - என்னை
நடித்திட வைப்பான் அவன்பாரம்
வானமும் பூமியும் அவன் அரங்கம் - இங்கு
வாழ்பவர் வணங்கிட திருவரங்கம்!

ஏனக்குள் இருந்து முளைத்தவனை
ஏனோ அவன்முகம் மறைக்கின்றாய்
உனக்கொரு அறிவுரைப் புகலுகின்றேன் - அந்த
உத்தமன் உறைவிடம் உரைத்திடுவாய்!

★

# கோதண்டராமா ! கோவிந்தராமா !

கோசல நாட்டு ராஜகுமாரா
கோதண்டராமா - அந்தக்
கோதண்டம் பிடித்து அரக்கரை அழித்த
கோவிந்த ராமா !

கேசவ மாதவ தேவகி மைந்தா
கோதண்டராமா - அந்தக்
கோகுல யாதவ யசோதை மைந்தா
கோவிந்த ராமா !

வைகுந்த வாசா வானவர் நேசா
கோதண்டராமா - அந்த
வானர சேனை வழிபடும் ராமா
கோவிந்த ராமா !

மெய்வழி நின்று ஐவருக் கருளிய
கோதண்ட ராமா - அன்று
மேட்டிலும் காட்டிலும் வாழ்ந்துகாட்டிய
கோவிந்த ராமா !

புண்ணிய பாவம் கீதையில் சொன்னவன்
கோதண்டராமா - இந்த
பூமிபாரத்தைத் தீர்த்திடத் தானோ
கோவிந்த ராமா !

❋

# எனக்குச் சொல்லனும்!

கண்ணனுக்கு என்ன குறை சொல்லிட வேண்டும்
காலைப் பிடித்து கெஞ்சுகிறேன் கருணை செய்யவும்;
விண்ணும் மண்ணும் அளந்ததினால் களைப்பு வந்ததா?
வீடுவாசல் இல்லையதனால் வெறுப்பு வந்ததா?

வெண்ணைத் திருடி தின்றதினால் வெட்கம் வந்ததா?
வேண்டி பக்தர் துதிப்பதனால் மறதி வந்ததா?
குன்றை எடுத்துக் குடைப்பிடிக்க வலிமை போனதா?
குள்ள வடிவ மெடுத்தினால் குணங்கள் குறைந்ததா?

பத்துப்பிறவி எடுத்ததினால் பதட்டம் வந்ததா?
பாவம் தீர்க்கத் திருமலையில் நிற்க நேர்ந்ததா?
சொத்துப் பத்து சுகமுமில்லை மனது கசத்ததா?
சின்னக் கண்ணன் என்பதனால் சிரமம் நேர்ந்ததா?

கோதண்டம் கைப்பிடிக்க கோபம் விளைந்ததா?
கோபியர்கள் சுற்றிவரவும் தாபம் பிறந்ததா?
சேதுஅணையைக் கட்டியதால் சிக்கல் ஆனதா?
சிவராமன் பேருனக்கு சிரத்தை மிகுந்ததா?

படுத்துத்தூங்க திருவரங்கம் போதவில்லையா?
படித்துச் சொன்ன கீதையினால் லாபமில்லையா?
கொடுத்துக் கரங்கள் சிவந்துபோக வேகமில்லையா?
கொவைகளவு கலியுகத்தில் நிறைந்த தொல்லையா?

பிள்ளைக்குட்டி இல்லையுனக்கு பெருத்த கவலையா ?
பெற்றபிள்ளை ஐயப்பனை நினைவிலில்லையா ?
பள்ளிகொள்ளும் பாம்பணைமேல் படுக்க நடுக்கமா ?
பார்த்து ரசிக்க திருமகளும் பக்கல் இல்லையா !

பூதகியின் பாலைஉண்ட போதை மயக்கமா ?
பாரதப் போர் நடத்தி வைத்த பாதைசறுக்கலா ?
கோதை ஆண்டாள் பாவைப்பாடி கொடுத்த கணக்கிலா ?
குரங்குக் கூட்ட நெருக்கத்தினால் கொண்ட மயக்கிலா ?

கருத்தமேனி உனக்கதனால் காதல் தோல்வியா ?
காலநேரம் போதவில்லை கடுமை வேலையா ?
கருடன்ஏறும் காரணத்தால் காதுகுடைச்சலா ?
காமக்குரோதம் ஏதுமில்லா கஞ்சத் தனத்திலா ?

மால்விடையராய் சுமந்துசென்ற மதிப்புக் குறைவிலா ?
மனிதனாகப் பிறந்துபிறந்து மதித்த நிலையிலா ?
வால்பிடித்து வானரத்தால் இலங்கை சென்றதா ?
வஞ்சகனாம் ராவணனை வதைத்துக் கொன்றதா ?

மாமனை நீ கொன்றதனால் பாசம் போனதா ?
மாரீச மானைக்கொன்ற வம்பு வழக்கிலா ?
மாதவர்கள் அன்புநெருக்க அவதிப் பிடியிலா ?
மாயஉருவம் பெண்ணுருவாய் மலர்ந்த சுவையிலா ?

என்னகுறை இருந்தாலும் மறந்திடவேண்டும் !
ஏதுபிழை செய்தாலும் மன்னிக்கவேண்டும் !
மன்னவனே ! சின்னக்கண்ணா ! நின் துணைவேண்டும்
மறுபடியும் பிறந்துவந்து வரம்தரவேண்டும் !

★

# கண்ணனைக் கண்டால் சொல்லிவிடு

## இசைப் பாடல்

### பல்லவி

அழைத்த சேதியை சொல்வேன் - தோழி
அழைத்த சேதியை சொல்வேன்

### அனுபல்லவி

இளைத்தது மேனி தனிமையிலே - அந்த
இளையவன் கண்ணன் எக்கத்திலே!

[அழைத்த]

### சரணம்

இமைகளும் கண்களை மூடவில்லை - என்
இதயமும் வேறிடம் போகவில்லை
சுமையாய் நினைவுகள் வருத்துதடி - அந்த
சுந்தரன் வரவில்லை வருத்தமடி!

[அழைத்த]

கைவளை நாட்பட பெருத்ததடி - என்
கச்சைகள் தினம்தினம் சிறுத்ததடி
மையலில் உதடுகள் வரளுதடி - அந்த
மாயனும் வரவில்லை கோபமடி

[அழைத்த]

பேசிடும் நாவு குழறுதடி - என்
பெண்மையின் தாகமும் குன்றயுதடி
வீசிடும் தென்றல் சுட்டதடி - என்
விம்மலை சொல்லவும் வெட்கமடி

[அழைத்த]

கண்ணனைக் கண்டால் சொல்லிவிடு - என்
காதலை அவனிடம் உரைத்துவிடு
பன்னெடுங் காலம் காத்திருப்பேன் - அந்தப்
பரம்பொருள் வரும்வழி பார்த்திருப்பேன்

[அழைத்த]



# உருகுகின்றான்!

## இசைப் பாடல்

### பல்லவி

உன்னால் எனக்கு ஆவதுண்டு - கண்ணா
என்னால் உனக்கு ஆவதுண்டோ!

### அனுபல்லவி

பொன் படைத்தார்க்குப் பெருமையுண்டு - அந்தப்
பொன்னால் பொன்னுக்கு நன்மையுண்டோ!

[உன்னால்]

### சரணம்

கண்கள் காண்பது உன்னருளால் - அந்தக்
கருணைக்கு என்னால் தருவதுண்டோ!
மண்ணில் நடப்பது உன்னருளால் - உன்
மாண்புக்கு என்னால் தருவதுண்டோ

[உன்னால்]

காற்றும் நீரும் கதி ரொளியும் - உன்
காட்சியின் பெருமையை நானறிவேன்
நேற்றுஇன்று நடப்ப தெல்லாம் - அதனை
நிச்சயம் என்னால் உணர்துண்டோ!

[உன்னால்]

காயும் கனியும் தருபவன் நீ - என்
கைப்பட அதனை விளைப்பதுண்டோ
மனிதரின் மனம்போல் நடப்பதில்லை - உன்னால்
மாற்றிட முடியும் தடுப்பதுண்டோ!

[உன்னால்]

இருக்கின்ற தெதுவும் உன்னுடைமை - நான்
இருப்பதும் பிழைப்பதும் உன் கடமை
அருளிடவேண்டும் திருமாலே - நின்
அன்புக்கு சரணம் நெடுமாலே!

[உன்னால்]

# சுதந்தரா வர வேண்டும்

## இசைப் பாடல்

### பல்லவி

பிறவிகள் எத்தனை எடுத்தாலும் - அந்தப்
பெருமாள் திருவடி துணை வேண்டும் !

### அனுபல்லவி

வரும் வரும் பிறவிகள் எதுவாயிருப்பினும் - அந்த
வாசவன் திருவருள் தரவேண்டும் .

[பிறவிகள்]

### சரணம்

இல்லற வாழ்வில் நானிருந்தால் - என்
இரு கரம் ராமனைத் தொழ வேண்டும்
புல்லாய்ப் பூமியில் நான் முளைத்தால் - அந்தப்
புல்லாங் குழலிசைப் பெறவேண்டும் .

[பிறவிகள்]

வறுமைப் பிணியில் வாழ்ந்திடும் காலம் - அந்த
வேங்கடத் தானவன் தரவேண்டும்
திருமலை திருப்பதி தரிசனங் கண்டு - அவன்
திருவடி சரணம் புகவேண்டும் !

[பிறவிகள்]

அகப்பேய் என்னை ஆட்டிடும்போது - அந்த
ஆழிக் கண்ணனை நினைத்திடுவேன்
இகபரம் இரண்டிலும் சுகம்பெற - அவனை
இனித்திடும் வாழ்வைக் கேட்டு வைப்பேன் !

[பிறவிகள்]

தொண்டர்கள் கூட்டில் இருந்திட எனக்கு - அவன்
துணையாயிருந்து அருள் புரிவான்
அண்டங்கள் ஆளும் அரிதிருநாமம் - அது
அபயம் என்றிட அருள்புரிவான் !

[பிறவிகள்]



# தருமமே ஜெயம்

## இசைப் பாடல்

### பல்லவி

என்னைப்போல் பாக்கியம் செய்தவர் யார் - நான்
ஏழேழ் பிறவியில் செய்திட்ட புண்ணியமே

### அனுபல்லவி

தானாக என்னெஞ்சில் வந்தமர்ந்தான் - அவன்
தருமத்தை என்காதில் சொல்லி வைத்தான் !

[என்னைப்]

### சரணம்

தருமமே ஜெயமென்று சொல்லி விட்டான் - அந்தத்
தலைவனே கதியென்று இருந்துவிட்டேன்
பொறுமைக்கு அளவில்லை புரிய வைத்தான் - அந்தப்
பெருமானே சதமென்று வாழ்ந்து விட்டேன் !

[என்னைப்]

சத்தியம் காத்திட வந்துதித்தான் - அவன்
சாத்திரம் தோத்திரம் நிதியளித்தான்
பத்தியை நித்தமும் அவன்வளர்த்தான் - அந்தப்
பரம்பொருள் திருமாலை கைகுவித்தேன் !

[என்னைப்]

பால்தரும் பசுவுக்கு காம்புவைத்தான் - அந்தப்
பழம் தர மரத்துக்கு வேர்கள் வைத்தான்
பாம்பையும் காத்திட விஷமளித்தான் - அந்தப்
பரம்பொருள் எங்குமே நிறைந்து விட்டான் !

[என்னைப்]

எறும்புகள் ஊர்ந்திடும் ஓசையையும் - அந்த
இறைவன் அதனையும் கேட்டறிந்தான்
துரும்பும் அவனின்றி அசைந்திடுமோ - அவன்
துணைந்தனம் உலகெலாம் வாழ்ந்திடுமே !

[என்னைப்]



# கண்ணன் குழலோசை!

## இசைப் பாடல்

### பல்லவி

புன்னை மர நிழலில் - கண்ணன்
புல்லாங் குழலிசைத்தான்

### அனுபல்லவி

என்னை மறந்து விட்டேன் - தோழி
இனிமையில் மயங்கி விட்டேன் !

(புன்னை)

### சரணம்

பச்சைப் பயிர்களெல்லாம் - அவர்
பாட்டுக்குத் தலையசைக்கும்
பச்சைக் கிளியினங்கள் - அங்கு
பறந்தோடி இலையுதிர்க்கும் !

(புன்னை)

கொட்டும் மலையருவி - குழல்
இசைக் கேற்ப தாளமிடும்
மொட்டு மலரினங்கள் - இசை
மெட்டுக்கு இதழ்விரிக்கும் !

(புன்னை)

நீர்மூழ்கும் கோழிகளும் - கரை
நெருக்கத்தில் வந்து நிற்கும்
ஏர் ஓட்டும் உழவர்களும் - அந்த
இசைக்கேற்ப நடையிருக்கும் !

(புன்னை)

கண்ணன் ஊதும் குழலோசை - எந்தக்
காலமும் உலகத்தில் இசைத்திருக்கும்
மண்ணில் உயிரினம் பிழைத்திருக்கும் - அந்த
மாலவன் நினைவிலே தயவிருக்கும் !

# கண்ணன் புண்ணியம் !

## இசைப் பாடல்

### பல்லவி

காட்டுக்குச் சென்ற கண்ணனைக் காணோம்
கதிரவன் மேற் கடைந்தான்

### அனுபல்லவி

காட்டுக் குகைகளில் தூங்கி விட்டானோ
கவலையை எனக் களித்தான் !

(காட்டுக்கு)

### சரணம்

வேதங்கள் படிக்கத் தனித்து விட்டானோ ?
வேதனை அடைகின்றேன் - அவன்
காதல் வலையில் சிக்கி விட்டானோ
கவலை அடைகின்றேன் !

(காட்டுக்கு)

தாய்ப்பசு பிரிந்த கன்றினைப் போலே
தனிமையில் தவிக்கின்றேன் - அந்த
மாயக் கண்ணனின் சோதனை இதுவென
மனதில் சிரிக்கின்றேன் !

(காட்டுக்கு)

காற்றில் தவழும் குழலிசைக் கேட்டேன்
கண்ணனைக் காணவில்லை - அவன்
காட்டில் வலம்வரும் ஓசையைக் கேட்டேன்
கண்ணனும் வரவில்லை !

(காட்டுக்கு)

என்னில் கலந்த எழில்மிகு நாயகன்
கண்ணெதிர் நிற்கின்றான் - அந்தக்
கண்ணனின் திருவடி காண்பதில் புண்ணியம்
காதலில் மகிழ்கின்றேன் !



# அரியும் சிவனும் ஒன்று !

அரியும் சிவனும் அன்புருவாம்
அடியவர்க் கருளும் ஒருருவாம்
எரியும் தீயில் இரு பொருளாம்
ஏக னனேகன் பலவடிவாம் !

கருவும் உயிரும் அரிசிவமாம்
காப்பதும் அருள்வதும் அவர்குணமாம்
பரியை நரியாய் மாற்றிய சிவமே
பரம்பொருள் அரியாய் பற்பலவாம் !

நாரண னென்றும் நாயக னென்றும்
நாத விந்துகள் ஆதிய தென்றும்
காரண னென்றும் காரிய னென்றும்
கண்ணும் ஒளியும் ஒன்றது போலே !

உயிராய்த் தெரிவான் சிவமயமாய்
உயிரில் உறைவான் அரிமயமாய்
பரும்பொருள் எதிலும் பரம் பொருளாய்
பல்லுயிர யாவும் ஹரி மயமாம் !

உருவங்கள் பலவாய் உயிரில் அருவாய்
உரு தெரியாத சூட்சுமப் பொருளாய்
ஒரு பொருள் அரிசிவன் ஒன்றெனக் கொள்வீர்
ஒன்றே மதமென உணர்ந்திட செய்வீர்

★

# தலைவனை வாழ்த்துகிறேன் !

செடியிலும் கொடியிலும் செங்கண் மாலே
சிவனருள் புரிகின்றான் - எந்த
நதியிலும் மலையிலும் நீரெனப் பெருகி
நெடுமால் அருள்கின்றான் !

பகலிலும் இரவிலும் கதிரொளி நிலவொளி
பரமன் விதிக்கின்றான் — அவன்
சுகந்தர உலகில் சூட்சும மாகி
சூதனன் அருள்கின்றான் !

இளமையும் முதுமையும் இரண்டையுங் கொடுத்து
என்றைக்கும் இருக்கின்றான் - அவன்
வளர்பிறை தேய்பிறை வடிவங்கள் கொடுத்து
வாழ்ந்திட வைக்கின்றான் !

இலைகளை உதிர்த்து இளந்தளிர் முளைத்திட
இறைவன் செய்கின்றான் — அவன்
தலைமுதல் கால்வரை தத்துவம் அமைத்து
தானே உணர்த்துகிறான் !

கொள்முதல் செய்பவன் கொடுப்பவன் தடுப்பவன்
கொண்டல் கண்ணனவன் — அவன்
தாளிணைப் பணிந்து ; திருவருள் வழங்கிடும்
தலைவனை வாழ்த்துகிறேன் !



## காக்கும் கடவுளே !

வேங்கட முடையானை ; விண்ணவர் தலைவனை ;
தாங்கும் கருணையை ; தாயன்பைத் தருவானை ;
திருமகள் மார்பனை ; திருப்பதிப் பெருமாளை
குருவாயூ ரப்பனை ; கூர்மவ தாரனை ;

நரசிம்ம ரூபனை ; நரஹரி நாரணனை ;
மரவுரி தரித்தானை ; மாலவன் என்பானை ;
பாற்கடல் உறைவானை ; பரந்தாமன் பேரானை ;
நாற்கவிப் பெருமாளின் ; நாவில் உறைவானை ;

மாலிருஞ் சோலையின் ; மன்னர்க்கு மன்னனை ;
வாலியை வதை செய்த ; வேட்கட ராமனை ;
கோதண்ட ராமனை ; கோபியர் தோழனை ;
ஆதவன் என்றிடும் ; ஆயர்கள் துணைவனை ;

கோவர்த்தன கிரியைக் குடையாய்ப் பிடித்தவனை
பூவண்ணன் என்றிடும் ; பூமகள் நாதனை ;
வாமன வடிவனை ; வாழ்த்துக் குரியனை ;
தாமரைக் கண்ணனை ; தசரதன் மைந்தனை

காக்கும் கடவுளைக் காஞ்சி வரதனை ;
தாய்க்கும் மேலானை ; தருமத்தின் தந்தையை ;
பிருந்தா வனத்தினை பெரிதாண்ட கண்ணனை
கருத்த மேனியனை ; காக்கும் கடவுளை ;



# திருமால் திருமாலை !

மாயா ! மதுசூதனா ! மாலே மணிவண்ணா !
மண்ணுசீர் வாயால் மண்ணுண்ட கண்ணா !
நேயா ! நின்மலா ! நீளரங்கத் தெம்மானே !
நித்தியா ! நிலமளந்த நெடுமாலே ! நீர்வண்ணா !

கோசல ராமனே ! கோபியர் கண்ணனே !
தாயே யென் தந்தையே ! தாங்கும் என் சுற்றமே !
தாமோதரா ! தாளேன் இனித்துயரம் ஸ்ரீஹரியே !
ஹரியே என்றுன்னை ஆராதித்த பேருக்கு

அனுக்ரகம் செய்தாய் ! அலங்காரப்பிரியனே !
சூரியனே சந்திரனே ! சுகமளிக்கும் மந்திரமே !
சொன்னசொல் தவறாத ஸ்ரீராமச் சந்திரனே !
நேரியனே ! நெறிதவறா காரியனே ! நர்த்தனனே !

பொன்னிசூழ் திருவரங்கப் பெருமாளே ! பூமனமே !
புகழோங்கும் காஞ்சிவளர் பொற்குவையே ! புகழ்மணியே !
நன்னிதியே ! பண்ணுமெழில் திருமலைப் பதிநிதியே !
நமோ நமோ நாராயணா ! நலமருளும் ஸ்ரீதரனே !

---

திருமங்கையாழ்வார் வேங்கடவனைப்
பாடியருளிய பெரிய திருமொழிப் பாடலிது !

---

மண்ணாய் நீரெரிகால் மஞ்சுலாவு மாகாசமுமாம்
புண்ணார் ஆக்கைதன்னுள் புலம்பித்தளர்ந்
தெய்த்தொழிந்தேன்
விண்ணார் நீள்சிகர விரையார் திருவேங்கடவா
அண்ணா வந்தடைந்தேன் அடியேனையாட்
கொண்டருளே !

நரவென்றும் திருமாலே! நவநிதியம்! நந்தபின்
தந்தையாய் முந்திக்குத் தானருள வேண்டும்!
பரம்பொருளே! பரந்தாமா! பக்தியை யருள்கின்ற
பைம்பொழிலே! பகைவாரா திருக்க வேண்டும்!
நரசிம்மா! நம்பிய பேருக்கு நல்விருந்தே!
நாயடியேன் நல்வழிக் கருள வேண்டும்!
சிரம்பத்து கொய்த செப்பருஞ் செல்வமகனே!
**சிவஹரியே!** சிறியேனை அருள வேண்டும்!

வென்றுவென்! விண்ணவர்த் தலைவனே! வேங்கடனே!
வேதாந்த நாயகனே! விற்பிடித்த வெற்றிவீரனே!
பாண்டுமகற் கைவர்க்குப் பரிந்துதவி செய்தவனே!
பகற்போதில் ஆழியால் பரிதியை மறைத்தவனே!
தூண்டா மணிவிளக்கே! தொண்டர்த் திருவிளக்கே!
சூரியன் பகைவென்ற; தூய ஒளி விளக்கே!
ஆண்டவனே! **அம்பிகைக்** கருள்செய் அருளொளியே!
அடியேனை ஆட்கொள்ளும் அருளமுதே! அறக்கதிரே!

கனிந்த சொற்சுவையே! கண்ணின் கருமணியே!
கரியமால் வரதனே! கரும்பில் செங்கரும்பே!
பனிவிழும் திருமலைத் திருவேங்கடத் தெள்ளமுதே!
பரசுராம பலவானே! பகவானே! பண்டொருநாள்
வானவர்க்கு ஆழிகடைந் தமுதளித்த அற்புதனே!
வாழ்கொடையே! வஞ்சமிலா நெஞ்சர்க்கு வாழ்வருளும்
தேனமுதே! தெவிட்டாத தீஞ்சுவையே! திருமாலே!
தேவர்க் கருளியவா றெனக்கருளும் தேவதேவே!

ஈந்தவன் ஈரேழு புவனங்கள் ஈந்தவாறு
எல்லாமும் காத்தவன்! எவ்வுயிர்க்கும் இடரிலாத
ஆந்திர தேசத்தில் அழகேழ் மலைநின்று
அருளாட்சி செய்கின்ற அதிபதியே! அறவாழி
அந்தணனே! அகலிகை சாபம் தீர்த்த
அந்தமில் ஆதியனே! அகிலமெலாம் அளிக்கும்
சிந்தனைச் செல்வனே! செகத்து ரட்சகனே!
செங்கண்மால் மாதவா! செல்வமுதனே!

செல்வமு கல்வியும் சீரும் சிறப்பும்
சிவராமா! செய்தருளும்; செடியாய வல்வினைகள்
இல்லாமல் வரமருளும் செயராமா! எந்நோயும்
எனையணுகா திருந்துவிட அருள வேண்டும்!
வல்லான் சிசுபாலன் வஞ்சகன் ஜராசந்தன்;
வித்தை சகடா சூரன் பலபல அரக்கரை
புல்லாணித் தலம்வாழும் புனிதனே போக்கினான்;
புண்ணியம் நிலைத்தோங்க பூமியில் செய்தனனே!

களித்தேன்! திருமலைக் கட்டழகு நாயகனை
கண்டபின்; களித்தேன்! இதயக் கமலம்வைத்து
தெளிந்தேன்! சிந்தைத் தெளிவிக்கும் தேசிகனை
தேர்ந்தேன்; திருவடி சரண்புகுந்தேன்!
விளித்தேன்! விமலா! அமலா! அபயமென
வேண்டினேன் பலகாலம்; வேண்டுவதைத் தருகவென;
அளித்தானே! அருள் செய்து அவன்புகழ்ப் பாடுதற்கு
யான்பெற்றேன் இப்பேறு! எந்தையை ஏற்றினனே!

ஏற்றினேன் இதயத்தில் இறைவன் திருவடியை
எல்லாம் அவன்செயல்; எல்லாமும் அவனேதான்;
போற்றிக் களிக்கின்றேன்; புதுப்பிறவி யானேனே!
பூமியில் கால்வைத்த புருஷோத்மன்; பூச்சொரிந்து
ஆற்றுக் கவிபாடி ஆற்றினேன்! அமரர்கோன்!
அவனெடுத்த விஸ்வரூபம் அமைதியுற வேண்டினேன்!
சாற்றுக் கவிபாடி சாந்தமுற வேண்டினேன்!
சரணம் சரணமென தமிழ்மாலை சூட்டினேன்!

அதிசயம் கேண்மின்! ஆதியில் மகாவிஷ்ணு;
அறப்போர் தொடுத்தான்! தேவாசுரப் போராட்டம்;
துதிசெய்து தேவர்கள் திருமாலை வேண்டவும்;
துக்கத்தைப் போக்கிட தொடர்ந்தான்போரினை
பதிபக்தி மிகுந்த சுக்கிரன அன்னையைப்
பதைக்க சிர மறுத்தான்! பாவந்தான்!
கதியில்லை அமரர்க்கு கருணைதான்! அவன்செயல்!
கொண்டனன்; பெருஞ்சாபம்! பிறவிபத் தெடுத்தான்!

சாபம் அவனுக்கு! சாந்தி உயிர்க்கெல்லாம்;
சரணமென அடைந்தார்க்கு சாதிப்பான் திருவருளால்;
நமக் கென்ன என்றில்லாமல் நம்மில் அவனிருப்பான்!
நாரணன் திருநாமம் நம்பிக்கை அருள்விளக்கு;
சுமக்கின்ற விதிமாறும்; சோதனை வாராது
சொத்து சுகம் தானேவரும்; சௌபாக்யம் தானேவரும்!
அமர வாழ்வுவரும் அடுத்தப்பிறவியிலும்
அமைதி நல்வாழ்வு அதிசயம் அதிசயமே!

# தூணில் தோன்றியவன் !

## கதைப் பாடல்

இரண்யன் கர்ஜித்தான் ! ஏடா பிரகலாதா !
யாரடா ? சொன்னது ' எதிரியின் நாமத்தை ;

பதினான்கு அண்டங்கள் ; பலகோடி தேவர்கள்
எதிர்வர அஞ்சுவர் ! எல்லார்க்கும் அதிபதிநான் !

சிவன்தான் கொடுத்தான் ; சிலபல வரங்களை ;
அவனாலும் என்னை அழிக்கவும் முடியாது !

எவனோ திருமாலாம் ! என்னெதிர் வருவானா ?
அவமானம் எனக்கு ! அரிஓம் எனும்சொல் !

இரண்ய நமஹவென என்பேர் சொல்லடா !
மறந்தும் அவன்பேரை மனதில் நினையாதே ;

எதிரியா யிருந்து நம்மினம் அழிப்பவன் ;
பதறுது நெஞ்சம் பாதகன் திருமால் !

அசுரர் வம்சத்தை அடியோடு அழிப்பவன் ;
சிசுபாலன் ; கம்சன் ; ஜராசந்தன் ; பத்மாசூரன் ;

இராவணன் ; சகடன் . பூதகி ; தாடகை ;
இத்தனைப் பேரையும் இலகுவில் கொன்றவன் ;

எத்தனைப் பேர்களை விஷ்ணு அழித்தான் !
பத்மா சூரனைப் பதைக்கக் கொன்றான் !

தலைமீது கைவைக்க தந்திரம் செய்தான் !
அலை அலையாக அவன்செய்த படுகொலை ;

சுக்கிரர் நம்குரு சொல்வதைக் கேளும் !
அக்கறை யுடன்நீ அப்பன் நாமத்தை ;

அடிக்கடி சொல்வாய் ; அன்பு மகனே !
இடக்குகள் செய்திட இனியும் முயன்றால் ;

பொறுக்க முடியாது ; பிள்ளையா யிருந்தாலும்
அறுப்பேன் உன்தலை ; அடித்துத் திருத்தியும்

யானைகால் இடறியும் ; வானுயர் மலையில்
பானை போல் உன்னை பதறிட உருட்டியும் ;

பல்பல விதங்களில் பாலகா உன்னை ;
கொலை தான் செய்திட குறித்தது தோல்வி ;

கடைசி முறையாகக் கனிவுடன் சொல்வேன் !
தடையின்றி நீயும் தந்தைசொல் கேட்பாய் !

உன்னைக் காப்பவன் உருவமில்லாதவன் ;
கண்முன் நீயும் காட்டுவாய் அவனை ;

முடியுமா ? உன்னால் மூடச் சிறுவனே !
பிடிவாதம் ஒழித்தென் பேச்சையும் கேட்பாய் !

என்ற சொல் கேட்டு இனிதாய்ப் பிரகலாதன் ;
தந்தையே ! அரியும் அழைத்திட வருவான் ;

தானாய் வருவான் ஆபத் பரந்தவன் !
தேனாய் இனிக்கும் திருமால் நாமம் !

ஊனாய் ! உடலாய் ! எங்ஙனி லிருப்பவன்
காணாமல் என்னுள் கண்களில் தெரிபவன் !

அடியார்க் கருளும் ஹரி நாராயணன் !
வடிவத் தோடவனும் வந்தெனைக் காப்பான் !

மாயவ தாரன் ; மாலவன் தாயவன் !
காயக் கோட்டையைக் காக்கும் கடவுள் !

வானத்தில் வெளியாய் இருப்பவன் அவனே ;
கானலில் நீராய்த் தெரிபவன் அவனே !

மண்ணில் பூவாய்ப் பூப்பவன் அவனே ;
தண்ணீ ருள்ளும் தணலாய் அவனே !

தூணிலும் இருப்பான் துரும்பிலும் இருப்பான் ;
வாணியன் செக்கிலும் வாழ்ந்து இருப்பான் !

ஓடும் நதியில் ஒலியா யிருப்பான் ;
வீடும் நாடும் விண்ணிலும் இருப்பான் !

புல்லிலும் பூண்டிலும் புழுவிலும் இருப்பான் ;
சொல்லிலும் செயலிலும் சுயமாய்த் தெரிவான் !

கல்லுக்குள் ஈரம் ; காற்றில் வாசம் ;
எல்லா நிலையிலும் எங்கும் இருப்பான் !

அணுவிலும் அணுவாய் அரியே யிருப்பான்;
ஆணாய் பெண்ணாய் அலியா யிருப்பான் !

ஆழ்கடல் மீதவன் அலையாய்த் திகழ்வான் ;
தாழ்விலும் வாழ்விலும் தக்கன செய்வான் !

ஆயிர மாயிரம் அவதாரம் எடுப்பான் ;
ஆயிர மாயிரம் குணங்களில் திரிவான் !

கண்களுக் கண்ணன் கண்ணன் அவன்பேர்
மண்ணை யுண்டவன் மாயவன் அவன் பேர் !

திருப்பாற் கடலில் துயில்கொண் டேடிபவன் :
உருபல வானவன் உத்தமன் அவன்பேர் !

ஆழ்கடல் கடைந்து அமுத மெடுத்தவன் ;
வாழ்ந்திட தேவர் ; வரம்பல கொடுத்தவன் !

எல்லாம் தெரிந்தவன் எதிலும் இருப்பவன் ;
பல்லுயி ரானவன் பரந்தாமன் அவன்பேர் !

நிறுத்தடா நிறுத்து ; நீட்டல் வேண்டாம் ;
குறுக்கே நுழைந்தான் கொடுஞ்சூர் இரண்யன் !

அதட்டிப் பேசவும் அடங்கினான் சிறுவன் ;
உதடு துடித்தது ; உள்ளம் கொதித்தது !

கோபத்தின் உச்சியில் கொடுஞ்சூர் இரண்யன் ;
ஆபத்தை யறியாமல் ஆணவம் பேசினான் !

அனாத ரட்சகன் ஆதி மூலனை ;
அறியா சிறுவன் அன்புடன் நினைத்தான் !

அரியும் எழுந்தான் ஆபத்துக் குதவிட ;
பரிதவித் திருக்கும் பாலனைக் காத்திட

தூணிலே மறைந்து ; தோற்றத்தை மறைத்தான் ;
ஆணவ இரணியன் ஆத்மாவில் நுழைந்தான் ;

உன்னுயிர் காக்கும் உலுத்தன் எங்குளான் ?
உறுமினான் இரணியன் ; உதறல் தெரிந்தது

எங்கே யிருக்கிறான் ? எங்கேயிருக் கிறான் ?
எனக்குக் காட்டுநீ ! எனக்குக் காட்டடா !

என்றவன் கேட்கவும் ; இயம்பினான் சிறுவன் ;
அன்புள்ள அப்பா ! அறிவாய் அரியை

ஆனந்தம் மேவிட ஹரிஹரி என்றான் ;
மோன நிலையில் ஹரஹரி என்றான் !

தந்தையே ! என்சொல் தவற மாட்டாது ;
எந்த நேரத்திலும் இறைவன் வருவான் !

மானுடன் வடிவிலும் ; மிருகத்தின் வடிவிலும் ;
தனித்தொரு உருவம் தாங்கியும் வருவான் !

மீண்டும் சொல்கிறேன் ! மீளவும் சொல்கிறேன் !
ஆண்டவன் அவன்தான் ! அனைத்திலும் இருப்பவன் !

தூணிலும் இருப்பான் ; துரும்பிலும் இருப்பான் ;
ஆணி வேரிலும் அரியே யிருப்பான் !

சொல்லினான் பாலகன் சீறினான் இரணியன் ;
சொல்வது உண்மையா ? சொல்லடா ! சொல்சொல் !

கல்தூண் இதிலே கடவுளைக் காட்டுக ;
கல்தூண் இதிலே ; காட்டடா பயலே !

எழுந்த கோபத்தில் எட்டி உதைத்தான் ;
அழுந்த உதைத்தான் ; ஆடியது கல்தூண் !

பிளந்தது அதுவும் பேரிடி யுடனே ;
தளர்ந்தான் இரணியன் திடுக்குற நின்றான் !

சிங்கத்தின் முகமும் ; செந்தழல் கண்களும் ;
அங்கம் மனிதனின் அவயவங் களுடனே ;

கழுத்தில் பிடரியும் ; கர்ஜனை ஒலியும் ;
விழுதுகள் போலே விரல்களில் நகங்கள்

நீண்ட நாக்குடன் ; நெற்றியில் நாமம்
நான்கு வேதங்கள் நமோநமோ என்றிட
நரசிம்ம வடிவில் ; நாரணன் தோன்றினான்

பரமனும் அங்கே பார்த்தான் அருளை ;

அவதார மெடுத்தான் ஹரி நாராயணன் ;
தவத்தோர் போற்றும் தசரதன் மைத்தன் !

அண்டங்கள் யாவினும் ஹரிஓம் ஒலித்தது ;
அண்டர் முனிவர்கள் ஆசி புரிந்தனர் !

நாரணன் நாமம் நடுக்கம் கொடுத்தது ;
பூரணப் பொருளைப் போற்றினர் வானவர் !

அலைகடல் அங்கே அடக்க மானது ;
மலைகளும் நதிகளும் மருண்டது புரண்டது !

மண்ணும் விண்ணும் மகிழ்ச்சியில் குலுங்கின ;
கண்ணன் மாயனைக் கண்டு வணங்கினர் !

அசுரர்கள் கூட்டம் அஞ்சி நடுங்கிட ;
விசுவ ரூபத்தான் வெளியில் பாய்ந்தான் !

பாய்ந்தவன் கண்களைப் பார்த்தான் இரணியன் ;
பயந்து நடுங்கினான் ; பார்வை மயங்கிட ;

இரணியன் தன்னை இறைவன் கைகளால் ;
இரண்டாய்ப் பிளந்து எறிந்தான் பூமியில்

பிரக லாதனும் பேச்சற்று நின்றான் !
அரியா சனத்தில் சிறுவனை அமர்த்தினான் !

எங்கும் அமைதி ! எங்கும் திருவருள்
சிங்கவ தாரன் சீர்க்கதை வாழியே !

# வரம் பெற்ற பத்மாசூரன் !

## இசைப் பாடல்

அரங்கா எழுந்திரு ; அவசரம் அவசரம் ;
அபயக் குரலில் சிவனும் அழைத்தான் !
அரிதுயில் அகன்று அரியும் எழுந்தான் ;
ஆபத்து என்ன ? என்பதை உணர்ந்தான் !

பத்மா சூரன் தான்பெற்ற வரத்தை ;
பரமன் தலையைக் குறியாய் வைத்தான் ;
சத்தியம் காத்திட அரிதிரு மாலும்
சமயத்தில் அவனும் பெண்ணுரு வெடுத்தான் !

சூரனும் சிவனை துரத்திச் செல்கிறான்
சிவனுக்கு சோதனை ஓடி ஒளிகிறான் !
காரண காரியம் அறிந்தவன் ஆங்கோர்
காய்க்குள் ஒளிந்து கவலை தீர்ந்தனன் !

மோகினி வடிவில் முரளி மனோகரன்
மோகனப் புன்னகை சிந்திட நின்றான் !
மேகத்தின் சாயலில் மெல்லிடை அசைந்திட
மாதவன் அங்கே சூரனின் பக்கலில் ;

சூரனும் கண்டான் சுந்தரி யாளை
யாரது ? எத்தனை அழகு ! இவளையும்
தாரமாக்கி தாலி அணைப்பேன் மறுத்துத்
தூர ஒதுங்கினால் தூக்கிச் செல்லுவேன் !

நினைத்தான் சூரனும் ; நெருங்கினாள் மோகினி.
கனைத்தான் ! கரகரத்த குரலில் பேசினான் !
அனிச்ச மலரே ! பெயரென்ன என்றான் !
குனிந்ததலை நிமிராமல் 'மோகினி' என்றாள் !

மாதவன் அவனிடம் மோகினி யானாள்
மையலில் சூரனும் மயக்கில் நின்றான் !
காதலில் மயங்கிய சூரனின் தோளைக்
கைவளைக் குலுங்கிட தொட்டு விட்டாள் !

வலித்ததா உனக்கு வாஞ்சையில் கேட்டாள் ;
புளித்தது ஆசை 'பெண்ணே' என்றான் !
சலித்துக் கொண்டான் ; பொட்டல் வெளியிது ;
வலித்து அழைத்தான் மறைவிடம் வாவென !

அசுரர் தலைவனே ! அழகா கேளும்
இசைவு தான் எனினும் இதை நீ கேட்பாய் !
மாசுகள் நீங்கநீ குளித்தப் பின்னாலே ;
மருவிட வரலாம் ; மனம்போல் இருக்கலாம் !

என்றவன் சொல்லவும் ; இசைந்தான் சூரனும் ;
நன்றுநன்று ! நல்லவள் நீ ! சொல்லைக் கேட்பேன் !
இன்றைக்கு எனக்கு இதுநல்ல வாய்ப்பு ;
இனியும் தாமதம் எதற்கென எண்ணினான் !

குளித்து வருவதாய்க் கூறிக் கிளம்பினான் !
கொஞ்சிய மோகினி விடையு மளித்தாள் !
அலைந்து தேடினான் நீர்நிலை யாவையும்
அங்கெல்லாம் ஒருதுளி தண்ணீரியு மில்லை !

கானல் நீரைக் காணவும் ஓடினான் ;
கண்களைக் கசக்கிப் பார்த்திட ; எங்கிலும்
தேனாய் இனிக்கும் மோகினி வடிவம்
தண்ணீ ரில்லாது தவியாய்த் தவித்தான் !

மாட்டுக் குளம்பில் கொஞ்சம் தண்ணீர் ;
மகிழ்ச்சிப் பொங்கிட விரலில் நனைத்தான் !
தொட் டெடுத்ததைத் தலையில் தடவினான் ;
தெறித்தது அவன்தலை சுக்கல் சுக்கலாய் !

பதைத்து விழுந்தான் ; பத்மா சூரனும் !
"பக்" கென சிரித்தாள் மோகினிப் பெண்ணும் !
வெற்றிக்கு அவளே விதைகள் இட்டவள் ;
வீணே அழிந்தான் சிவன் வரத்தாலே !

கேட்ட வரங்கள் நினைவில் லாமலே ;
கெட்டான் பத்மா சூரனும் தன்னால்
கேட்ட வரத்தை சிவனே கொடுத்தான் ;
கேளீர் அவ்வரம் யாதென சொல்வேன் !

யார் தலைமீதும் அவன்கை வைத்திட
அவர்தலை வெடித்திடும் சுக்கல் சுக்கலாய்
ஓர்வரம் இவ்வரம் சூரனும் கேட்டான் !
உயர் குணத்தாலே சிவனும் கொடுத்தான் !

சிவனும் கொடுத்த வரத்தைச் சோதிக்க
சிவன்தலைக் கேட்டான் பத்மா சூரனும்
சேவலைப் பெட்டைத் துரத்திய கதையாய்
சிவனும் ஓடினான் முன் அதைச் சொன்னோம் !

பத்மா சூரன் எரிந்ததைக் கண்டு ;
பரமனும் அங்கே வெளியில் வந்தான் ?
சக்தி யிவளோ ? மோகினிப் பெண்ணோ ?
சங்கரன் ஞானக் கண்களால் கண்டான் ?

வந்தது திருமால் ; வடிவத்தில் மாற்றம் !
வருந்துயர் நீக்கும் வானவர் தலைவன் !
சிந்தை மகிழ்ந்து சிவனும் நினைத்தான் ;
ஸ்ரீராமச் சந்திரன் செயலினை மதித்தான் !

மனம் கலந்தாலே மன்மத பாணம்
மோகினி உடலிலும் முக்கண் கலையிலும்
இனம் புரியாமல் இருந்த நிலையில்
இறையரு ளாலே 'ஐயப்பன்' பிறந்தான் !

ஐயப்பன் பிறந்ததும் அரகர என்றான்
ஐயம் தீர்ந்தது ஹரிஹரி என்றான் !
மையலை நீக்கி மாதவர் இருவரும்
ஐயம் வேண்டாம் ! ஐயப்பா என்றனர் !

தேவர்கள் இத்திருக் காட்சியைக் கண்டனர் ;
திருமால் சிவனையும் வாழ்த்தி வணங்கினர் !
திருமலைப் பதிவாழ் தெய்வத்தைப் பணிந்தனர் ;
திருப்பெருந் துறைவாழ் சிவனையும் வாழ்த்தினர் !

❋

# குலசேகர ஆழ்வார் அருளிச் செய்த பெருமாள் திருமொழியில்' திருவேங்கடத்தானை தொடர்பு வேண்டல் எனும் தலைப்பில்

## பாடியருளியது

ஊனேறு செல்வத் துடற்பிறவி யான்வேண்டேன்
ஆனேறேழ் வென்றான் அடிமைத் திறமல்லால்
கூனேறு சங்கம் இடத்தான் தன் **திருவேங்கடத்து**
கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே !

ஆனாத செல்வத் தரம்பையர்கள் தற்சூழ
வானாளும் செல்வமும் மன்னரசும் யான் வேண்டேன்
தேனார் பூஞ்சோலைத் **திருவேங்கடச்** சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதியுடையே னாவேனே !

பின்னிட்ட சடையானும் பிரமனும் இந்திரனும்
துன்னிட்டுப் புகலரிய வைகுந்த நீள் வாசல்
மின்வட்டச் சுடராழி **வேங்கடக்கோன்** தானுமிழும்
பொன் வட்டில் பிடித்துடனே புகழ்பெறுவே னாவேனே !

ஒண்பவள வேலை யுலவுதன் பாற்கடலுள்
கண் துயிலும் மாலோன் கழலிணைகள் காண்பதற்கு
பண்பகரும் வண்டினங்கள் பண்பாடும் **வேங்கடத்து**
செண்பகமாய் நிற்கும் திருவுடையே னாவேனே !

கம்பமத யானைக் கழுத்தகத்தின் மேலிருந்து
இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான்வேண்டேன்
எம்பெருமா னீசன் எழில் **வேங்கட மலைமேல்**
தம்பகமாய் நிற்கும் தவமுடையே னாவேனே !

மின்னனைய நுண்ணிடையார் உருப்பசியும் மேனகையு
அன்னவர்தம் பாடலொடும் ஆடலவை ஆதரியேன்
தென்னவென வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்து
அன்னனைய பொற்குவடா மருந்தவத்த னாவேனே !

வானாளும் மாமதிபோல் வெண்குடைக்கீழ் மன்னவர்தம்
கோனாகி வீற்றிருந்து கொண்டாடும் செல்வறியேன்
தேனார் பூஞ்சோலைத் திருவேங்கட மலைமேல்
கானாறாய்ப் பாயும் கருத்துடையே னாவேனே !

பிறையேறு சடையானும் பிரமனும் இந்திரனும்
முறையாய பெருவேள்விக் குறைமுடிப்பான் மறையானா
வெறியார் தண்சோலைத் திருவேங்கட மலைமேல்
நெறியாய்க் கிடக்கும் நிலையுடையே னாவேனே !

செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே ! வேங்கடவா ! நின்கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே !

உம்பர் உலகாண் டொருகுடைக்கீழ் உருப்பசிதன்
அம்பொற் கலையல்குல் பெற்றாலும் ஆதரியேன்
செம்பவள வாயான் திருவேங்கட மென்னும்
எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனும் ஆவேனே !

மன்னியதண் சாரல் வடவேங்கடத் தான்தன்
பொன்னியலும் சேவடிகள் காண்பான் புரிந்திறைஞ்சி
சொன்னவிலும் கூர்வேற் குலசேகரன் சொன்ன
பன்னிய நூல் தமிழ்வல்லார் பாங்காய பக்தர்களே !



# திருமங்கையாழ்வார் அருளிச் செய்த 'பெரிய திருமொழி' யில் ''கொங்கலர்ந்த'' என்ற தலைப்பில் திருவேங்கடத்தானைப் பாடியருளியது

கொங்கலர்ந்த மலர்க்குருந்தம் ஒசிந்த கோவலன் எம்பிரான்
சங்குதங்கு தடங்கடல் துயில்கொண்ட தாமரைக் கண்ணினன்
பொங்கு புள்ளினை வாய்பிளந்த புராணர் தம்மிடம் பொங்குநீர்
செங்கயல் திளைக்கும் சுனைத் திருவேங்கடம் அடைநெஞ்சமே !

பள்ளியாவது பாற்கடல் அரங்கம் இரங்கவன் பேய்முலை
பிள்ளையா யுயிருண்ட எந்தைபிரான் அவன்பெருகும் இடம்
வெள்ளியான் கரியான் மணிநிறவண்ணன் என்றெண்ணி நரடோறும்
தெள்ளியார் வணங்கும் மலைத் திருவேங்கடம் அடைநெஞ்சமே !

நின்றமாமரு திற்றுவீழ நடந்த நின்மலன் நேமியான்
என்றும் வானவர் கைதொழும் இணைத்தாமரையடி யெம்பிரான்
கன்றிமாரி பொழிந்திடக் கடிது ஆநிரைக்கிடர் நீக்குவான்
சென்றுகுன்றம் எடுத்தவன் திருவேககடம் அடைநெஞ்சமே !

பார்த்தற் காயன்று பாரதங் கைசெய்திட்டு வென்ற பரஞ்சுடர்
கோத்தங் காயர்தம் பாடியில் குரவை பிணைந்த எம்கோவலன்
ஏத்துவார்தம் மனத்துள்ளான் இடவெந்தை மேவிய எம்பிரான்
தீர்த்தநீர்த் தடஞ்சோலை திருவேங்கடம் அடைநேஞ்சமே ]

வண்கையான் அவுணர்க்கு நாயகன் வேள்வியிற் சென்று மணியாய்
மண்கையால் இரந்தான் மராமரம் ஏழும்எய்த வலத்தினன்
எண்கையால் இமயத்துள்ளான் இருஞ்சோலை மேவிய
திண்கைம் மாதுயர் தீர்த்தவன் திருவேங்கடம் அடைநெஞ்சமே !

# நம்மாழ்வார் 'திருவாய் மொழி'யில் 'ஒழிவில் காலம்' என்ற தலைப்பில் திருவேங்கடத்தானைப் பாடியருளியது!

ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி
வழுவிலா அடிமைசெய்ய வேண்டும் நாம்
தெழிகுரல் அருவித்திருவேங்கடத்து
எழில்கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கே!

எந்தை தந்தை தந்தை தந்தைக்கும்
மூந்தை வானவர் வானவர் கோனொடும்
சிந்துபூ மகிழும் திருவேங்கடத்து
அந்தமில் புகழ்க் காரெழில் அண்ணலே!

அண்ணல் மாயவன் அணிகொள் செந்தாமரைக்
கண்ணன் செங்கனி வாய்க்கரு மாணிக்கம்
தெண்ணிறைச் சுனைநீர்த் திருவேங்கடத்து
எண்ணில் தொல்புகழ் வானவ ரீசனே!

ஈசன் வானவர்க் கென்பன் என்றால்அது
தேச மோ திருவேங்கடத் தானுக்கு
நீசனேன் நிறைவொன்று மிலேன் என்கண்
பாசம் வைத்த பரஞ்சுடர்ச் சோதிக்கே!

சோதியாதி யெல்லா வுலகும் தொழும்
ஆதி மூர்த்தி யென்றால் அளவாகுமோ
வேதியர் முழு வேதத் தமுதத்தை
தீதில் சீர்த் திருவேங்கடத்தானையே

# பொய்கையாழ்வார் அருளிச் செய்த "முதல்திருவந்தாதி" யில் திருவேங்கடத்தானைப் பாடியருளியது !

வகையறு நுண்கேள்வி வாய்வார்கள் நாளும்
புகைவிளக்கும் பூம்புனல் வந்தி - திசை திசையின்
வேதியர்கள் சென்றிறைஞ்சும் வேங்கடமே வெண்சங்கம்
ஊதிய மாலுகந்த ஊர் !

ஊரும் வரியரவம் ஒண்குறவர் மால்யானை
பேர எறிந்த பெருமணியை - காருடைய
மின்னென்று புற்றடையும் வேங்கடமே மேலசுரர்
எம்மென்னும் மால திடம் !

இடந்தது பூமி எடுத்தது குன்றம்
கடந்தது கஞ்சனை முன் அஞ்ச - இடந்ததுவும்
நீராத மாகடலே நின்றதுவும் வேங்கடமே
பேரோத வண்ணர் பெரிது !

பெருவில் பகழிக் குறவர்கைச் செந்தீ
வெருவில் புனம்துறந்த வேழம் - இருவிசும்பில்
மின்விழக் கண்டஞ்சும் வேங்கடமே மேல் அசுரர்
கோன்வீழக் கண்டுகந்தான் குன்று !

வழிநின்று நின்னைத் தொழுவார் வழுவா
மொழிநின்ற மூர்த்தியரே ஆவர் - பழுதொன்றும்
வாராத வண்ணமே விண்கொடுக்கும் மண்ணளந்த
சீரான் திருவேங் கடம் !

திருமால் திருமாலை முற்றிற்று !

# சிரஞ்சீவி அனுமன்!

அசோக வனத்தில்
அனுமன் புகுந்தான்
அன்னை சீதையை அவன்கண்டான் - அவன்
ஆனந்த மாக
ராம் ராமென்று
அன்புடன் வணங்கி நின்றான் !

சீதை மகிழ்ந்திட
ஸ்ரீராமன் கொடுத்த
கணையாழி தந்து நின்றான் - தான்
அயோத்தி ராமனின்
அடிமை என்றானே
அரிராம் தூத னென்றான்.

ராம தூதனே
ராம தூதனே
அழைத்தாள் சீதை யவள்
சிரஞ்சீவி யாகநீ
வாழ்வாய் என்று
ஸ்ரீ தேவி வரம் கொடுத்தாள் !

அன்னையின் ஆசியைப்
ஏற்ற அனுமனும்
ஆஹா என குதித்தான்
அரக்கர் கூட்டத்தைத்
த்வம்சம் செய்வதாய்
அண்டங்கள் நடுங்க வைத்தான் !

அரக்கர் கூட்டமும்
அனுமனைத் தேடி
அசோக வனம் புகுந்தார் - அங்கே
ஆஞ்ச நேயனின்
வடிவத்தைக் கண்டு
அஞ்சி ஒடுங்கி நின்றார் !

வேருடன் மரங்களைப்
பிடுங்கி எறிந்தான்
வாயுவின் மைந்த னவன் - அங்கே
விண்ணுக்கும் மண்ணுக்கும்
விஸ்வ ரூபனாய்
விளங்கியே நடுங்க வைத்தான் !

கையி லிருக்கும்
தண்டத்தை எடுத்து
ககனத்தில் விட் டெறிந்தான் - அங்கே
பொய்வழி நடக்கும்
அரக்கரின் தலைகளைப்
போரெ்ன அவன் குலித்தான் !

எத்தனை அரக்கர்கள்
மாண்டு மடித்தனர்
என்னே அவன் வீரம் - அந்த
ஸ்ரீராம பக்தனின்
திருவடிப் பணிந்து
சித்திகள் நாம் பெறுவோம் !

*

# சாந்தியருள்வாய் அனுமனே !

சரணம் சரணம் அனுமனே
சாந்தம் அருள்வாய் அனுமனே
இரவும் பகலும் உன்நினைவே
எனக்கருள் செய்வாய் தலைவனே !

வடையும் சுண்டலும் நானளிப்பேன்
வழிவழி துணையாய் நீவருவாய்
இடர்வரும் போது உன்னை நினைப்பேன்
என்துணை யாக நீயிருப்பாய் !

கனிகளை உன்முன் குவித்திடுவேன்
கருணையை வேண்டி கைகுவிப்பேன்
இனிவரும் பிறப்பிலும் உன்துணையை
இதயத்தில் வைத்து சரண்புகுவேன் !

இரவும் பகலும் எந்த நேரமும்
என்வழி உன்வழி வழித்துணையே
பரம்பொருள் திருமால் மாதநூளியில்
படிந்திடும் தூசாய் வழிவிடுவாய் !

திருமலை ஈசன் தரிசனத்தை
தினம் நான் காண உதவிடுவாய்
அருவாய் உருவாய் உடன்வருவாய்
ஆனந்தம் அதுவே கண்திறப்பாய் !

உலக மெங்கனும் உன்வழியில்
உத்தமத் தொண்டர்கள் உருப்பெறவே
வலம்வந் துன்னை வாழ்த்துகிறேன்
வாழ்க வாழ்கவே ஆஞ்சநேயனே !



# அனுமந்தா வருக வருக!

அஞ்சனா தேவிபெற்ற அனுமந்தா வருகவருக
தஞ்சமென நின்பாதம் சரணம்நீ வருக வருக!

அரிராமன் பக்தனே அன்பனே வருக வருக
தருமத்தின் துணைநின்ற தலைவனே வருக வருக!

எழுகடல் தாண்டியே இலங்கைநகர் சென்றவா
தொழுகின்ற அன்பர்க்கு துணையாக நின்றவா!

இராவணன் படைகளை இடர்செய்து வென்றவா
அரியதிரு மாலர்க்கு அருள்தொண்ட னானவா!

அழுவார்க்கும் தொழுவார்க்கும் அன்பனாய் ஆனவா
வழுவாதந் தண்டமதை வலதுகைக் கொண்டவா!

தேனமர் சோலையில் திருமலை நின்றவா
வானர சேனையின் வழிகாட்டும் நல்லவா!

வாயுவின் மைந்தனே வரவேண்டும் அனுமனே
தாய்போலும் சீதையின் தனயனே அனுமனே!

சிரஞ்சீவி வரம்பெற்ற ஸ்ரீராமன் பக்தனே
வரவேண்டும் வரவேண்டும் வாயுவின் மைந்தனே!

உன்னைப்போ லொருதொண்டன் உருமா லர்க்காருண்டு
அன்புள்ளம் பக்திக்கோ ரடியாரும் யாருண்டு?

விண்ணிலும் மண்ணிலும் விளையாடும் வடிவத்தோய்
தன்னிக ரில்லாத தாயன்பு நெஞ்சத்தோய்!

உன்துணை வேண்டியே உளமார துதிக்கின்றேன்
எனக்கருள் அனுமனே! என்னாளும் துணைவனே!

❋

# நூலாசிரியரின் வாழ்க்கைக் குறிப்பு



தமிழகத்தின் தலைநகராம் சீர்மிகு சென்னையிலுள்ள "ஈகை" என வழங்கும் ஈக்காட்டுத்தாங்கலில் வசித்து வந்த சின்னசாமி - அன்னம்மாள் தம்பதியர்க்கு ஆறாவது மகனாக 23-4-1934ல் பிறந்த இவரின் பெயர் சி. தாமோதரன்.

1954ல் பள்ளி இறுதி தேர்வில் தெர்ச்சி பெற்றார். 1956ல் சல்சா என்னும் நல்லாளை இல்லாளாய் கொண்ட இவருக்கு நான்கு மகன்களுய் நான்கு மகளும் உண்டு

நற்றமிழ்க் கவியில் ஆழ்ந்த புலமைப் பெற்றவரான இவர் ஆயிரத்துக்கும் மேலான பக்திப்பாடல்களும் இலக்கியக் கவிதைகளும் இயற்றியுள்ளார். மேலும் சிந்தையில் தேனூறும் சிவம் பூத்தமலர்கள், அறிவார்ந்த ஆன்மிகக்கதைகள், கணபதி கைவல்யம், வெற்றிவேல் விருத்தம், சிவயோக மாலை, கனகதுர்க்கை கவசம், இவர்கள் மனிதர்கள் தத்துவப்புலம்பல் திருக்குறளில் தான தருமங்கள் போன்ற நூல்களும் இயற்றியுள்ளார்!

அன்னைத் தமிழுக்கு அயராது தொண்டாற்றும் இவரின் இலக்கியப் படைப்புக்கு அமெரிக்கன் பல்கலைக்கழகத்தினரால் "டாக்டர்" பட்டம் வழங்கப்பட்டுள்ளது. கவிஞர்கள் முன்னேற்றக்கழகம் என்ற அமைப்பு 1992ல் விருது வழங்கி சிறப்பித்துள்ளது. மேலும் பல விருதுகள் பெற்ற இவருக்கு அருட்கவி, கவிஞர்திலகம், நற்றமிழ்ச்செல்வர் போன்ற சிறப்புப் பட்டங்களும் பெற்றிருக்கிறார்.

மேலும் 'தமிழ்க் கவிஞர் கலைமன்றம்" இவரின்எழுத்துப் பணியைப்பாராட்டி "திருவள்ளுவர்" விருதும் வழங்கியுள்ளது.

**பொன். கணேசன்**
ஆசிரியர், அம்பாள் மகிமை
சென்னை-24